# ஜாபாலி

(வேதகால நாடகம்)




M. ராஜ்



## எங்கள் குருதேவர்



**ஸ்ரீலஸ்ரீ. V. K. தியாகராஜ் சுவாமிகள்**

அவர்களின் பொற்பாத கமலங்களுக்கு

இச்சிறுநூல்

அடியேனின் அன்புக் காணிக்கை.

ஆக்கியோன்

**டாக்டர் து. ராஜ்மோகன்ராஜ்.**

# ஜாபாலா

## (வேதகால நாடகம்)

(நிலைமை விளக்கம் : மணி ஒலிக்கிறது. பறவைகள் ஒலி. பசுவின், கன்றின் குரல்கள்.. உதய கால மங்கல ஒலிகள் அவையை நிரப்புகின்றன. வேத மந்த்ர கோஷப் பின்னணியில் மிகத்தெளிவான ஒரு குரல் அடியில் வரும் சுலோகத்தை ஒலிக்கிறது)

**சுலோகம்.**

ஓம்!
மனோமய: ப்ராணஷரீரோ பாருப:
சத்ய ஸங்க்கல்ப்ப ஆகாஷாத்மா
ஸர்வகர்மா ஸர்வகாம:
ஸர்வகந்த: ஸர்வரஸ:
ஸர்வ மிதமத் யாத்தோஸ் வாக்யனுதர:

ஏஷம் ஆத்மாந்த்த ஹ்ருதயே யணியான்
வ்ரிஹேர்வா யவாத்வா
ஸர்ஷ பாத்வா ஷ்யாமாகாத்வா
ஷ்யாமாக - தண்டுலாத் வைஷ

ம ஆத்மாந்த் தர் ஹ்ருதயே
ஜ்யா யான் ப்ரிதிவ்யா ஜ்யா யானந்த் தரீ
ஷாஜ்ஜயா யாந்தி வோ
ஜ்யாயா னேப்யோ லோகேப்ய: ஓம்!
ஓம்! ஓம்! ஓம்!

*இது முடிந்ததும் பூபாள ராகத்தில்*
*கீழ்வரும் பாடல் ஒலிக்கிறது.*

ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்
மனத்துறை நாயகன் எவனோ
உயிராம் உடம்பினன் எவனோ
சித்தமியல் பாயவன் எவனோ
ஓர்ந்துகண் ணோடாதான் எவனோ
உயர்விசும் புருவோன் எவனோ
அடங்கலும் படைத்தவன் எவனோ
ஏதமில் குணப்பரன் எவனோ

நாற்றங்கள் அனைத்தும் எவனோ
சுவையெலாம் ஆனோன் எவனோ
பரந்துமே கரந்தவன் எவனோ
சொல்லிறந்த சூக்குமம் எவனோ
வேண்டுதல்வேண் டாதான் எவனோ

அவனேஎன் ஆத்துமன் அவனே
மலர்மிசை ஏகினான் அவனே
நெல்லினும் சிறியான் அவனே
ரவையினும் சிறியான் அவனே
கடுகினும் சிறியான் அவனே
தினையினும் சிறியான் அவனே
தினைமுளை போல்வான் அவனே
அவனேஎன் இதயத் துளனே!

உளனே உலகினும் பெரியோனாகவே
உளனே சுந்தர வானினும் நெடிதே
உளனே விசும்பின் பரபபெலாம் விரிந்தே
உளனே புவனங்கள் யாவையும் கடந்தே

மலர்மிசை ஏகினான் எவனோ அவனே
ஆத்துமன் ஆனோன் பிரம்மமும் ஆனோன்
அவன்தன் மலரடி வணங்குதும் நாமே!
ஓம்! ஓம்! ஓம்! ஓம்! ஓம்!

—திரை உயர்கிறது—

## காட்சி 1

(நிலைமை விளக்கம்: நடு வயது கடந்த மாது ஒருத்தி தன் மூன்று வயது மகனுடன் விளையாடிக் கொண்டிருக்கிறாள். அவன் கையில் ஒரு முயல் குட்டி. ஓர் ஆசிரமத்தின் சூழல்)

சிறு: அம்மா! அம்மா! இந்த முயல் குட்டி என்ன அழகு பார்த்தாயா?

தாய்: சத்தியகாமா! அந்தக் குட்டியை இப்படிக்கொடு. அதைக் கசக்காதே.

சத் : ஏன்?

தாய்: அதற்கு வலிக்காதா? இப்படிக் கொடு.

சத் : நான் மாட்டேன்.

தாய்: கொடுக்கிறாயா இல்லையா? சமர்த்துக் கண்ணு! கொடுடா இப்படி.

சத் : சரி இந்தா. (கொடுக்கிறான்)

தாய்: (வாங்கிக் கைகளில் வைத்துக் கொண்டு) பார்த்தாயா, பயத்தினால் எப்படி நடுங்குகிறது?

சத் : (அவள் கன்னத்தைப் பிடித்துக் கொண்டு) அம்மா; அம்மா! வலி என்றால் என்ன? பயம் என்றால் என்ன?

தாய்: ஆரம்பித்து விட்டாயா? கேள்விகளை என்னிடம் கேட்காதே.

சத் : ஏன்மா?

தாய்: எனக்குப் பதில் தெரியாது.

சத் : ஏன் தெரியாது?

தாய்: தெரியாது. அதனால் தெரியாது.

சத் : (சிரிப்புடன்) தெரியாது, அதனால் தெரியாது. உம். அம்மா சொல்லும்மா.

தாய்: குருதேவர் வருவார். அவரிடம் கேள்.
(அப்போது குருநாதர் அங்கே வருகிறார். தாய் எழுந்து நிற்கிறாள்)

குரு : என்ன ஜாபாலா! குழந்தையிடம் என்னவோ என்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாயே!

ஜா : இல்லை சாமி! இவன் இந்த முயல் குட்டியை அதோ அந்தப் புதரிலிருந்து, அதன் தாய் முயலுக்குத் தெரியாமல் கொண்டுவந்து விட்டான். அதை அப்படிப் போட்டுக் கசக்காதேடா, அதற்கு வலிக்கும், அது பயப்படுகிறது என்று சொன்னேன். அதிலிருந்து இவன் வலி என்றால் என்ன? பயம் என்றால் என்ன? என்று கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டான். அதற்குப் பதில் எனக்குத் தெரியாது. சுவாமி வருவார். அவரைக் கேள் என்று சொல்லிக் கொண்டிருந்தேன். அப்போதுதான் தாங்கள் வந்தீர்கள்.

குரு : அப்படியா கண்ணு சத்தியகாமா! அப்படியா? (அவன் தலையை முன்னும் பின்னும் ஆட்டுகிறான்) நல்லது. ரொம்பவும் நல்லது. முயல் குட்டியை எடுத்துப் போய் அந்தப் புதரிலேயே விட்டு விட்டு வா. நாம் மலைக்குப் போகலாம். (சிறுவன் ஓடிப்போய்ப் போட்டுவிட்டு ஓடிவருகிறான்) இந்தா. என் கையைப் பிடித்துக் கொள். ஊம். நாம் போகலாமா? (குழந்தை தலையை ஆட்டுகிறான். இருவரும் போகிறார்கள்)

—திரை விழுகிறது—

## காட்சி 2

(நிலைமை விளக்கம் : ஆசிரமத்தின் உள்கூடம். அங்கே சீடர்கள் விவாதித்துக் கொண்டிருக்கின்றார்கள். கூடவே அந்தப் பொடியன் சத்தியகாமனும் இருக்கிறான்)

1. சீ: ஓர் ஆத்மா மற்றோர் ஆத்மாவை வழி நடத்தாது என்றால் என்ன அர்த்தம்?
2. அதுதான் அர்த்தம்.
1. டேய் மடப் பயலே! ஞான சூன்யம்! சும்மா இரு
2. சும்மா இருப்பது ஞானிகளுக்கே தகும். எனக்கு எப்படித் தகும்?
1. நீ சூன்யம். உனக்கு அது பொருந்தாது.
2. அப்படிப் பொருந்தாத எனக்கு அதைப் போதனை செய்த நீ சூனியமா நான் சூனியமா?

3. இரண்டு பேருமே சூனியங்கள் தான். அதிருக்கட்டும் ஆத்மாவுக்குப் பிறப்பும் இல்லை. மரணமும் இல்லை என்கிறார்களே! அது எப்படிச் சரியாகும்? எப்போது அது இந்த உடலிலே வந்ததோ அப்போது நாம் பிறக்கிறோம். அது போகும் போது நாம் சாகிறோம். அப்படியிருக்கும்போது ஆத்மாவைப் பற்றிய இந்த விளக்கம் சரியா?

2. ஏழை பணக்காரன் என்று இறைவன் படைப்பது முட்டாள் தனம்டா, இல்லாவிட்டால் யாகம் செய்யப் பொன் வேண்டும் என்று கேட்டு நம் குருதேவர் மன்னனிடம் போவாரா?

3. ஏன்? போகக்கூடாது என்கிறாயா?

2. ஆமாம்!

2. அப்படியிருக்கும்போது, நம் குருதேவர் மன்னனிடம் போனால், உலகப் பொருளான பொன் தான் உயர்ந்தது என்றல்லவா ஆகிறது?

3. ஆமாம்.

2. "அப்படியில்லை. ஞானம் தான் உயர்ந்தது" என்று உலகம் தெரிந்துகொள்ள வேண்டும் என்றால், மன்னன் இந்தக் காட்டுக்கு வந்து குருதேவரை வணங்கிப் பொன்னைக் கொடுத்து விட்டுப் போகவேண்டும்.

1. இது நடக்குமா?

2. நடக்குமா என்பதில்லை கேள்வி. நடந்தாகவேண்டும்.

சத் : (குறுக்கிட்டு) அண்ணா! அண்ணா! வலி என்றால் என்ன? பயம் என்றால் என்ன?

1. என்னடா பொடியா ?

2. சத்ய காமா! கேள்வியா கேட்கிறாய்?

3. அடேய்! இவன்களுக்கெல்லாம உன் கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாது.

சத் : ஏன்?

2. நாங்கள் தான் உன் அம்மாவைக் கேட்போம். அவள் பதில் சொல்வாள். இப்போது....

1. நீ என்னடா என்றால், எங்களையே கேள்வி கேட்கிறாய்.

3. அடேய் பிரபு! அவன் கேள்விக்குப் பதில் சொல்லுடா! (கண்ணடிக்கிறான்)
2. அதுவும் சரிதான். சரி வா. வந்து என் எதிரில் உட்கார்.
சத் : ஏன்?
2. கேள்வி கேட்பவரும் பதில் சொல்பவரும் எதிரெதிரே இருந்து வாதம் செய்ய வேண்டும்.
1. என்பது தர்க்க சாஸ்திர விதி. எனவே வந்து உட்கார், (பையன் உட்காருகிறான்)
உம். (மற்றவர்களைப்பார்த்து)நீங்கள்ளாம் சரியா நின்னுக் கோங்கடா(அவர்கள் பையனின் இரண்டு பக்கத்திலும் நெருங்கி உட்காருகிறார்கள். பையனுக்குப் பின்னால் ஒருவன் நிற்கிறான். பையன் மிரள்கிறான்)
3. அடேய் பொடியா! இப்போது உன் முதல் கேள்வியைக் கேள்.
சத் : (மகிழ்வுடன்) அண்ணா! வலி என்றால் என்ன?
2. வலி என்பது ஜீவர்களைக் காப்பாற்றும் ஒரு தேவ சக்தி. உடம்பும் உயிரும் ஒன்றாக இருக்கும் வரையிலும் இது இருக்கும. பல நேரங்களில் மரணம் என்பது வராமல் தடுக்கும் தேவதையே வலி என்பது, உயிருள்ள எல்லாவற்றிற்கும் வலி என்பதுண்டு.
1. உதாரணம் காட்டுடா.
2. (அன்புடன்) சத்திய காமா! உதாரணம் காட்ட வேண்டுமா?
சத் : ஆம்மாம் அண்ணா!
2. அப்படியானால் குனி தம்பி!
(சத்திய காமன் குனிகின்றான். எதிரே இருப்பவன் கண்களை மூடிக் கொண்டே)
சத்திய காமா! தம்பி!
சத் : அண்ணா!
2. நன்றாகக் குனிந்தாயா?
1. இன்னும் நல்லா குனிடா (அவன் குனிகிறான்)
3. (சத்திய காமனை அழுக்கிக் குனிய வைத்து) உம் அப்படி.

2. தம்பி!
சத் : அண்ணு!
2. இதோ பார் உதாரணம்! (சத்திய காமனின் முதுகில் ஓங்கி நன்ருக ஓர் அறை வைக்கிருன்)
சத் : அய்யய்யோ! (வேதனையில் வீறிடுகிருன்)
2. இந்தா இன்ஞென்று (மறுபடியும் அறைகிருன்)
3. போதுமாடா? (அமுக்கிப் பிடித்துக் கொண்டே)
சத் : போதும் போதும் (ஓடப் பார்க்கிருன்
(ஓடுகிருன். மறுபடியும் இரண்டு பேர் அவனைப் பிடித்து இழுத்து வருகிருர்கள்)
2. தமபி! இநதா இன்ஞென்று.
(சத்திய காமன் அலறுகிருன)
3. எனனடா சத்யா! என்ன செய்கிறது?
சத் : (முதுகைத் தடவிக் கொண்டே) வலிக்கிறது.
2. (அனபு ஒழுக) இப்போது புரிந்து கொண்டாயா தமபி! வலி என்பது என்ன?
சத் : இது தான்.
2. மெத்த மகிழ்ச்சி. இங்கே எல்லாமே அனுபவப் பாடம் தான். (நீட்டி இழுத்து) மகனே! உன் அடுத்த கேள்வி என்னவோ?
சத் : (அமைதி)
3. சொல்லுடா!
2. கிட்டே வாடா!
சத் : உஹூம். நான மாட்டேன்.
2. ஏன்?
சத் : நீங்க மறுபடியும் அடிப்பீங்க.
2. கேள்வியைச் சொல்.
சத் : பயம் என்ருல் என்ன?
1. கிட்டே வாடா!
சத் : நான் மாட்டேன்.
3. ஏண்டா?
சத் : நீங்க அல்லோரும் அடிப்பீங்க. (ஓடுகிருன்)
2. டேய்! அவனைப் பிடிச்சி இழுத்துண்டு வாங்கடா.
சத் : (அழுகிருன்)

2. விடாதிங்கடா! பிரபு! நீ இந்தக் கையைப் பிடி. அருணு! நீ அந்தக் கையைப் பிடி. பயலைத் தூக்கிக் கிட்டு வாங்கடா (அவர்கள் பிடிக்க, இவன் திமிற ஒரே அல்லோல கல்லோலம். இரண்டு பேரும் அவனைக் குண்டு கட்டாய்த் தூக்கிக் கொண்டு வந்து உட்கார வைக்கிறார்கள்)
வாடா பயலே! இப்பச் சொல்லு. கேள்வி என்ன?

சத் : (அழுகிறான்)

2. ஏண்டா அழறே?

சத் : நீங்க அடிப்பீங்க.

2. அடிச்சா என்னடா?

சத் : வலிக்கும்.

2. வலிச்சா வலிச்சிட்டுப் போறது. அதுக்கு நீயேன் வர மாட்டேங்குறே?

சத் : பயம்மா இருக்கு.

2. ஏன்?

சத் : நீங்க அடிப்பீங்களோன்னிட்டு.

3. ஊம். இப்ப புரிஞ்சதா பயங்கறது? அடிச்சா வலிக்கும். இல்லையா?

சத் : ஆமா!

2. அடி விழுந்தா வலிவரும், வலி வருமேன்னு பயம் வரும். இப்பப் புரிஞ்சதா?

சத் : (தலையை ஆட்டுகிறான்)

1. இன்னொண்ணு வைடா! பாடம் மனசிலே நல்லாப் பதியும்.

2. வைக்கட்டுமா? (ஒர் அறை வைக்கிறான்)
(சத்திய காமன் அலறுகிறான். குருதேவர் வருகின்ற காலடிச் சத்தம். கூடவே குரல்)

குரு: என்னடா அங்கே சத்தம்?
(குரு வருகிறார். சத்திய காமன் ஓடி விடுகிறான். எல்லோரும் வணக்கத்துடன் எழுந்து நிற்கிறார்கள்)

(திரை விழுகிறது)

## காட்சி 3

[நிலைமை விளக்கம்: குழந்தை சத்யகாமனுக்கு ஜாபாலா விளையாட்டு வில் கட்டிக் கொடுத்துக் கொண்டிருக்கிருள். மாலைக் காலம். இரண்டு சந்நியாசிகள் அங்கே வருகிருர்கள். அவர்களைக் கண்டதும் அவள் எழுந்து வணங்குகிருள். ஒரு துறவி அவளைக் கூர்ந்து பார்த்து விட்டுக் கேட்கிருர்.]

1. து: உன் பெயர் ஜாபாலா தானே?
ஜா : ஆம் சுவாமி. இதோ ஆசனத்தில் அமருங்கள்.
2. து: நீ முன்பு நிருபகேதனர் ஆசிரமத்திலே இருந்தாய் அல்லவா? (ஆசனத்தில் அமர்கிருர்கள்)
ஜா : ஆமாம் சுவாமி.
2. து: இந்தச் சிறுவன் உன் மகனு?
ஜா : ஆம் சுவாமி.
1. து: எப்போது பிறந்தான்?
ஜா : நான்கு ஆண்டுகளுக்கு முன்பு சுவாமி.
2. து: பையனின் முகக் குறி இலட்சணமாக இருக்கிறது மகளே! அவனைப் படிக்க வை.
ஜா : அப்படியே சுவாமி. (திரும்பி) சத்ய காமா!
சத் : அம்மா!
ஜா : வா இங்கே! சுவாமிகளை வணங்கு.
(கையில் விளையாட்டு வில்லுடன் வந்து அவர்களை வணங்குகிருன்)
2. து: ஞானம் உண்டாகட்டும். (ஆசீர்வதிக்கிருர்)
1. து: பையா! உன் பேர் என்ன?
சத் : சத்ய காம ஜாபாலன்.
2. து: மழலை இன்னும் மாறவில்லை.
ஜா : மகனே! சுவாமிகளுக்குத் தீர்த்தங் கொடு.
(சத்யா வில்லுடன் ஓடுகிருன்)
சுவாமி! நீங்கள் எங்கேயிருந்து வருகிறீர்கள்?
2. து: பஞ்சத் திராவிடிகளுடன் சேர்ந்து கன்னியாகுமரி போய்த் தீர்த்தமாடி விட்டுக் கங்கைக் கரையில் தங்கியிருந்தேன். அப்போது இவர் சந்தித்தார்.

இருவருமாக வழி நெடுகிலும் தெய்வத் தலங்களைத் தரிசித்துக் கொண்டே இப்போது இந்த ஆசிரமத்திற்கு வந்திருக்கிறோம்.

ஜா : (கல கல வென்று நகைக்கிறாள்)

2. து: (சாந்தமாக ஏன் அம்மணீ நகைக்கிறாய்?

ஜா : சுவாமி மன்னிக்க வேண்டும். அச்யுதருடைய பாத கமலங்களிலிருந்து பொங்கிப் பெருகி வரும் கங்கை நீர், தொடர்ந்து சேவிப்பவர்களைத் தான் புனிதமாக்கும். ஆனால் அவருடைய திருவடிகளில் நீங்காத் பற்றுடைய பரம சாந்தாகளான முனிவர்களின் சேர்க்கையோ, அப்போதே மனிதர்களைப் புனிதமாக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியிருக்க, நீங்கள் கன்னியாகுமரித் தீர்த்தத்தில் ஆடி வருவதும், பிறகு இரண்டு பேருமாகக் கங்கா தீர்த்தத்தில் தங்குவதும், எல்லாம் எனக்குச் சிரிப்பையே தருகின்றன. ஞானிகளே! உங்களைப் போன்ற பரம பக்த பாகவதர்கள், தாங்களே தீர்த்தங்களாக விளங்குகிறார்கள் என்றும், அந்தக் கதாதரனை உள்ளக் கோயிலில் கொண்டவர்களாதலால தீர்த்தங்களையும் அவர்கள் புனிதமாக்குகின்றார்கள் என்றும், ஆதலால் பகவானே தனது அந்தப் பக்தர்களுக்குப் பாத சேவை பண்ணுகிறான் என்றும், அடியேன் கேள்விப்பட்டிருக்கிறேன். அதனால், தீர்த்தங்களுக்கும பெரியதோர் தீர்த்த பலம் தரும் நீங்களே தீர்த்த மாடச் சென்றால் நாம் எங்கே போவது என்று சிந்தித்தேன். அதனால் சிரிப்பு வந்தது. மன்னிக்க வேண்டும். ஒரு கணம் இருங்கள்.

(போகிறாள். சத்ய காமன் நீர் கொண்டு வந்து அவர்களிருவரின் பாதங்களை விளக்குகிறான். அப்போது குரு பத்தினியும் ஜாபாலாவும் உள்ளே வருகிறார்கள்)

குருப: சுஸ்வாகதம். நல்வரவாகுக. வணக்கம். சாமிகளே!

1. து: (ஆசீர்வதிக்கிறார்) ஞானமுண்டாகட்டும் (ஜாபாலாவை நோக்கி) ஜாபாலா! நீ உன் உடலில் இருக்கும் போதே கைவல்லிய ஞானம் பெறுவாய்.

ஜா : சுவாமி! அத்தால் எனக்கு ஆவதென்ன? அந்த நிலையை அடைந்த பின் சிலநாள் கூட இந்த உடலில் உயிர் தங்காது என்று கேள்விப்பட்டிருக்கின்றேனே. அதைவிடச் சேவை பெரிது அல்லவா? இராமச்சந்திரர் ஆஞ்சநேயரையும், கண்ண பெருமான் உத்தவரையும் இங்கேயே இருந்து பக்தி செய்யச் சொல்லிப் போனார்களே! அதுபோல நானும் இங்கிருந்து சேவை செய்தே என் காலத்தைக் கழித்து விடுகிறேன் சாமி.

2. து: அதுவும் உண்மைதான் மகளே!

1. து: உலர்ந்த விறகிலே நெருப்புப் பற்றியதும் தீவிரமாக எரிவதுபோல் என்ன வேகமாகவும் விவேகமாகவும் உரையாடுகிறாள் இந்தப் பரிசாரிணி பார்த்தீர்களா?

2. து: (புன்னகையுடன்) பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். அவளுடைய வாதத் திறனும், தகுந்த ஆதாரங்களை முன் வைக்கும் அழகும், எனக்கு மிகவும் பிடித்திருக்கின்றன.

குருப: சுவாமி! இந்த எங்கள் ஆசிரமத்தில் இருக்கும் யாரையும் விட அதிகமாக வேத மந்திரங்களை அறிந்தவள் இவளே.

2. து: வேத மந்திரங்களை அறிவது என்பது வேறு. ஆனால் அதைச் சூக்ஷ்மமான இடத்தில் பிரயோகம் பண்ணுவது என்பது அதைவிட உயர்ந்தது அல்லவா? இயற்கையாகவே சூக்ஷ்மமான அறிவு இருந்து விட்டால்! அது அதைவிடவும் உயர்ந்தது அல்லவா? உலர்ந்த சுள்ளியில் நெய்யும் தோய்ந்திருந்து அதில் நெருப்பும் பற்றிக் கொண்டால், எப்படித் திகு திகு வென்று எரியுமோ, அப்படி இருக்கிறது ஜாபாலாவின் அறிவு நுட்பம். ஜாபாலாவைச் சுமதி என்றே அழைக்கலாம். சு+மதி என்றால் சூக்ஷ்மமான மதி, புத்தியை உடையவள் என்று அர்த்தம்.

ஜா : (நாணத்துடன்) சுவாமி. சற்றே பேசிக் கொண்டிருங்கள். (திரும்பி) அம்மா! நான் போய் இவர்களுக்குப் பழங்கள் கொண்டு வருகிறேன்.

குருப: சுவாமி. பேசிக் கொண்டிருங்கள். இதோ நானும்

போய்ப் பாலைக் கொண்டு வருகிறேன்.
(இருவரும் போகின்றார்கள்)

1. து: சுவாமி! இவளை ஹாரித்ருமத கௌதமர் ஆசிரமத்திற்கு அனுப்பி வைத்தாலென்ன?

2. து: ஆமாம்! நானும் அதைத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அவருக்கும் வயதேறி விட்டது. இவள் சென்றால் ஒரு தாயைப் போல் அந்த மஹானைக் கவனித்துக் கொள்வாள்.

1. து: கேட்டுப் பார்ப்போமா?

2. து: அப்படியே செய்வோம்.

1. து: தாங்களே பேசுங்கள்.

2. து: அப்படியே ஆகட்டும்.

1. து: இதோ, அவள் வந்து விட்டாள்.

திரை விழுகிறது.

## காட்சி 4

[நிலைமை விளக்கம்: ஆசிரமத்தின் உள்கூடம். பிரம்மச்சாரிகள் சுவடிகளை வைத்துக் கொண்டு அமர்ந்துள்ளனர். உரையாடல் நடக்கிறது.]

சீ. 1 : எங்கேடா நம் குருநாதர்?

சீ. 2. மாந்தாதா மன்னரிடம் போயிருக்கிறார்.

3. எப்போது வருவார்?

2 என்னிடம் சொல்லவில்லையே!

3. உனக்குத் தெரியுமாடா?

1. கேட்டு வந்து சொல்கிறேன்.

3. ஏய்! இதுதானே வேண்டாங்கறது.

1. பின்னே என்னடா? நம் குருநாதர் எங்கே என்று கேட்டவனே நான் தான். அப்படியிருக்க அவர் எப்போது வருவார் என்று என்னிடமே கேட்கிறாயே! கிண்டல் தானே இது

2. அதோ ஜாபாலா வருகிறாள். அவளிடம் கேட்போம்.
(ஜாபாலா வருகிறாள்)

1. ஜாபாலா!

ஜா : வந்தேன்.
1. எங்கே நம் குருநாதர்?
ஜா : மாந்தாதா மன்னரிடம் போயிருக்கிறார்
2. கூட, யார் போனார்கள்?
ஜா : மாண்டுகர் போனதைப் பார்த்தேன்.
(சத்தியகாமன் வருகிறான்)
1. ஜாபாலா! சத்யாவுக்கு என்ன வயது?
ஜா : ஐந்து வயதாகிறது சுவாமி.
(அனைவரும் சிரிக்கின்றார்கள்)
4. அவன் சாமியா? அவனைப் போய் சாமி என்கிறாயே!
ஜா : இன்றைய பிரம்மச்சாரி! நாளைய குரு அல்லவா?
1. இதெல்லாம் உனக்கு யார் கற்றுத் தந்தார்கள்?
2. கற்றுத்தர வேண்டுமா என்ன? ஜாபாலாவுக்குச் சூட்சுமமான அறிவு என்பது இந்தக் கானக வாசிகள் அத்தனைப் பேருக்கும் தெரியுமே!
4. ஜாபாலா!
ஜா : உம்
4. எங்களைப் பற்றி என்ன நினைக்கிறாய்?
ஜா : நினைக்க என்ன இருக்கிறது? கருப்பு நிறமான காக்கையுங் கூடப் பொன்மயமான மேருமலையின் பக்கத்திலே பறக்கும்போது, அது கூடப் பொன்னிறமாய்த் தெரியுமாம். அதுபோல ......
1. சபாஷ்! அவன் காக்கையே தான்.
2. அடேய்! காக்கையே பொன்னிறமாகும் போது, நாம் ஆவதற்குத் தடையும் உண்டா? அடேய்! நாமெல்லாம் நல்லவர்களடா!
3. ஓ ஹோ! அடேய்! உன் கணக்கில் நாமெல்லாம் நல்லவர்களா? (சிரிக்கிறான்)
ஜா : அதுபோலத் தான் நீங்களும். காக்கையின் உருவம் மாறாது என்றாலும், நிறமாவது மாறியது போலத் தோன்றுமல்லவா? அது போல உங்கள் தன்மை முழுக்க மாறாது என்றாலும், கொஞ்சமாவது மாறலாம் இல்லையா?
1. ஜாபாலா! வாழ்க்கை முழுவதும் பிரம்மச்சாரியாய்

இருப்பது மேலா? அல்லது குடும்ப வாழ்விலே இருப்பது மேலா?

ஜா : குடும்பம் என்றாலே, அந்த வார்த்தையோடு குழந்தை குட்டிகள் என்ற வார்த்தைகளும் எப்போதும் சேர்ந்தே வரும். குடும்பம் குழந்தை குட்டி என்பதெல்லாம் பெண்ணுக்குச் சொந்தமானவை. குடும்பம் இல்லாமல் பெண் இருக்கக் கூடாது. சரியாகச் சொல்ல வேண்டுமென்றால், ஆண் துணையின்றிப் பெண் ஒருத்தி தனியாக இருக்கவே கூடாது. அத்தோடு கடுமையான ஞான வழக்கைக்கு அவள் போகும் போது அவள் உடம்பே ஒரு தடையாக நிற்கிறது. அவள் அழகே தடையாகிறது. ஆசைகளாலேயே உருவான ஒரு பிண்டம் அவள். எனவே அவளுக்குக் குடும்பம் வேண்டும். இதுதான் இயற்கையானது.

ஆனால் ஆண்களோ எல்லாவிதத்திலும் மாறுபட்டவர்கள். பெண்கள் இல்லாமலேயே—அதாவது குடும்ப வாழ்வில் தங்களைப் பந்தப்படுத்திக் கொள்ளாமலேயே அவர்களால் வாழ முடியும். அடிக்கடித் தூய்மையிழந்து மாதத்தில் ஐந்து நாள் ஒய்வு கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் அவர்களுக்கு இல்லை. வன்மையான உடம்பும் அவர்களுக்கு இல்லை. முரட்டுத்தனமான ஞான உலகச் சாதனைக்கும் வைராக்கியத்திற்கும் ஈடு கொடுக்கக் கூடிய உடல் ஆண்களுக்கு அமைந்திருக்கிறது. கடுந்தவம் ஆண்களுக்கு இயல்பாக உரியது. அதனால்தான் தீவிரமான தவநிலையை ஆண்களுக்கு வழங்கும் நம் வேதங்கள், பெண்களுக்கு அவற்றை விதியாக விதிக்கவில்லை. விதிக்க முன் வரவும் இல்லை. ஆனால், அப்படித் துறந்து துறவிகளாகப் பெண்கள் விரும்பினால், பாகவத மதத்திலே அதற்கு அனுமதியும் வழங்கப்படுகிறது.

I. ஜாபாலா! அப்படியானால் பெண்களுக்கு மோட்ச சித்தி கிடையாது என்கிறாயா? அந்தத் தகுதி அவர்களுக்கு இல்லை என்கிறாயா?

ஜா : நான் அப்படிச் சொல்லவில்லையே!

1 பிறகென்ன? கடுந்தவம் செய்யப் பெண்களால் முடியாது என்று நீ சொன்னாய்! கடுந்தவத்தால் தான் மோட்ச சித்தி என்று வேதங்கள் கூறுகின்றன. எனவே கடுந்தவம் செய்ய முடியாத பெண் இனத்திற்கு மோட்ச சித்தி இல்லையென்று தானே ஆகிறது?

ஜா : வேதங்களில் அப்படித்தான் சொல்லியிருக்கிறது. ஆனால் அந்த உரிமையைப் பாகவத மதம் வழங்குகிறது என்றும் சொன்னேனே. குழந்தைகளும் தவஞ் செய்து அந்தப் பெருநிலையை அடையலாம் என்றும் அது கூறுகின்றதே! பிரகலாதன் யார்? பக்த துருவன் யார்? பக்த மார்க்கண்டேயன் யார்? இவர்கள் பெற்ற அந்தப் பெருநிலையைப் பற்றிப் பாகவதந்தான் பேசுகிறது.

3. பாகவத மதத்தை உண்டாக்கியவர் யார்?

ஜா : அதை யாரும் உண்டாக்கவில்லை. பக்தித் தத்துவத்தைப் பேசுவது எதுவோ அது பாகவத மதம். இடைக் காலத்தில் கண்ண பரமாத்மா அதைக் காட்டிக் கொடுத்தார். அவருக்கும் முன்னே நைமிசாரண்ய வனத்து முனிபுங்கவர்களுக்கு அதை ஸ்ரீ விகனச ஆச்சார்யன் காட்டிக் கொடுத்தார். பக்தி மார்க்கம் இந்த நாட்டின் சனாதன மார்க்கம். அதை யார் எப்போது உண்டாக்கினார்கள் என்று யாருக்கும் தெரியாது. பகவானுக்கு மட்டும்தான் தெரியும்.

1. பகவானுக்கு மட்டும் தெரியும் என்று நீ எப்படிச் சொல்கிறாய்? (சிரிக்கிறான்)

ஜா : ஏனென்றால், பகவானுக்குத்தான் சநாதனன் என்று பெயர் இருக்கிறது. அவருக்கு மட்டும்தான் அந்தப் பெயர் இருப்பதால்—உலகில் வேறு யாருக்கும் அப்படிப் பெயர் இல்லாததால்—நான் அந்த முடிவுக்கு வந்தேன். அப்படிச் சொன்னேன்.

(எல்லாரும் விழுந்து விழுந்து சிரிக்கிறார்கள். ஜாபாலாவும் சிரிக்கிறாள். சத்யகாமனும் சிரிக்கிறான்)

1. போதும்டா! சிரிப்பை நிறுத்துங்க.

2. ஏண்டா கோவிச்சுகறே ஜாபாலாவை மடக்கிப்புட

லாம்னு நினைச்சே-பாவம். மண் கவ்விட்டே!

3. வாதத்திலே ஜாபாலாவை ஜெயிக்க முடியுமாடா பயலே? ஹா ஹ் ஹா.

ஜா : இந்த வாதங்கூடத் தேவையில்லே. இதோ பாருங்கள் மைத்ரேயி, தன் கணவரையே வாதுக்கு அழைக்க வில்லையா? ஆனாலும் அவள், கானகத்திலே வாழ்ந்தாலும் தன் கணவனுக்கு அடங்கித் தானே வாழ்ந்தாள்? ஆண் துறவிகள் அனந்தம் பேர் இருக்கும் இந்தக் கானகத்திலே, பெண் துறவிகள் எத்தனைப் பேர் இருக்கிறார்கள்? ஆண் துறவிகள் தனித்தும், சீடர்களோடு சேர்ந்தும் இருப்பது போல், பெண் துறவிகள் தனித்தோ அல்லது சிஷ்யைகளுடன் சேர்ந்தோ ஏன் இல்லை? பெண்களுக்கு மோட்ச மார்க்கம் இல்லையென்று நான் சொல்லவில்லை. ஆனால் வன்மையானவர்கள் ஆண்கள் என்றும், மென்மையானவர்கள் பெண்கள் என்றும், இயற்கையானது அவர்களை அப்படிப் பிறவியிலேயே வித்தியாசப்படுத்தி வைத்திருக்கிறதே! அதைக் கவனித்தாலே போதுமே!

4. இவ்வளவு பேசும் நீ ஏன் பெண் துறவியாக ஆகக் கூடாது?

ஜா : (புன்சிரிப்புடன்) இப்போது நான் சொன்ன பதில், எனக்குங் கூடத்தானே பொருந்தும்?

1. முயற்சி செய்துதான் பாரேன்.

ஜா : அது எனக்குத் தேவையற்றது. நான் இப்போது வாழும் பரிசாரிணி வாழ்வே கூட ஒரு பெண் சந்நியாசினியின் வாழ்வு தானே!

(அனைவரும் சத்யகாமனைப் பார்த்து விட்டுச் சிரிக்கின்றார்கள்)

ஜா : (புன்னகையுடன்) பெண் சந்நியாசி என்றால் குழந்தை எப்படி வந்தது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். வேஷத்தால் தோற்றத்தால் வாழும் லௌகீக சந்நியாசத்தைத் தான் நீங்கள் சந்நியாசமாகக் கருதுகின்றீர்கள் என்பது இதனால் தெரிகின்றது. உண்மையில் அது வல்ல உண்மை. எனக்குக் கணவர் இல்லை

எந்தப் பற்றும் இல்லை. பற்றற்ற மனம் தான் சந்நி
யாசம். கடமைகளை ஒழுங்காகச் செய்வதுதான் சந்நி
யாசம் என்பது! உங்கள் பார்வையில் நான் சந்நி
யாசினி இல்லை. ஆனால், எந்த ஆசிரமம் என்னை
ஏற்றுக் கொள்ள வில்லை? சொல்லுங்கள். முனிவர்
களுக்குப் பணி விடைகள் செய்து வருகின்றேன்.
என சின்னஞ்சிறியவயது முதலே செய்து வருகிறேன்.
இதைத்தானே அவர்களுக்கு ரிஷி பத்தினிகளும்
குரு பத்தினிகளும் செய்து வருகிறார்கள்? நானோர்
பரிசாரிணி. ஆனால் என் கடமைகளை—பணிவிடை
களைப் பூசையாகக் கருதி நான் செய்கிறேன். அதனால்
இந்தக் கானகத்தில வாழும் எல்லாக் குரு பத்தினி
களும் என்மேல் பிரியம் வைத்திருக்கின்றார்கள். தாய்
தந்தையர் அற்ற நான், எனக்குப் புத்தி தெரிந்த
நாளிலிருந்து இந்தக் குரு குலங்களிலேயே தான்
வாழ்ந்து வருகின்றேன். என் பணி விடைகளைத்
தொடர்ந்து செய்து வருகின்றேன்.

1 ஜாபாலா! அதென்ன நீ கடமை என்கிறாய்—பணி
விடை என்கிறாய்! இரண்டும் வேறு வேறு அல்லவா?

ஜா : சுவாமி! இரண்டும் ஒன்றுதான். ஓம் பூர்ப் புவஸ்வ
என்று சூரிய காயத்ரியைச் சொல்லி, ஆதித்ய
ஹ்ருதயத்தை—சூரியனின் தேஜஸை, நீங்கள் மனத்தா
லே வணங்குகின்றீர்கள். அதுபோல் என் கடமைகளை
—பணி விடைகளை ஒழுங்காகச் செய்து, அந்த முனி
வர்களின் பாதங்களை மனத்தில் நிறுத்தி அவர்களது
அருளைத் தியானிக்கிறேன்.

4 எவ்வளவோ பெரியவை எல்லாம் இந்த உலகத்தி
லே உண்டு ஜாபாலா! எங்கள் மத்திம தேசத்திற்கு
நீ வா. புரிந்து கொள்வாய்!

ஜா : சுவாமி! எனக்கு இதைவிடப் பெரிய வாழ்வு வேண்
டாம். உங்களைப் போலச் சாஸ்திரங்கள் படிப்பதால்
தான் எனக்கு ஆவதென்ன? உங்களைப் போல
விதண்டா வாதக் கேள்விகள் கேட்கலாம். எதிர்
வழக்காடலாம். எனக்கு அவற்றால் விளையப்போகும்
லாபம் தான் என்ன? ஆத்மார்த்த ஞானம் போதிக்
காத எதுவும்—எந்த வித்தையும் வீண்! ஞானம்

ஒன்றே சத்தியம். சத்தியமானதால் அது நித்தியம். அதைவிடப் பெரிய வஸ்து—பொருள், இந்த உலகில் உண்டா சுவாமி?

1 ஞானத்தைப் பற்றி உனக்கென்ன தெரியும் என்று பேசுகிறாய் நீ?

2 எங்கள்—நாங்கள் படிக்கும்—சாஸ்திரங்களைக் குறை கூறுகின்றாயா ஜாபாலா?

3 எங்கள் கல்வி பிரயோஜனம் அற்றது என்று நீ கருதுகின்றாயா ஜாபாலா?

ஜா : நான் அப்படி யொன்றும் சொல்லவில்லை. நான் (1-ஐக் காட்டி) உங்களைப்போல் நாட்டை ஆளப் போகின்றேனா? இல்லை. (2-ஐக் காட்டி) உங்களைப் போல் அமைச்சர் ஆகப் போகின்றேனா? அதுவும் இல்லை. (3-ஐக் காட்டி) உங்களைப் போலப் போர்ப் படைகளை நடத்தும் தளபதியாகப் போகின்றேனா? அதுவும் இல்லை. (4-ஐக் காட்டி) அல்லது உங்களைப் போலக் கவிஞராகி, இந்த மொழியிலே காவியங்கள் எழுதி இறவாப் புகழ் எய்தப் போகின்றேனா? (5ஐக் காட்டி) அல்லது, உங்களைப் போல நீதி சாஸ்திரமும் தர்க்க சாஸ்திரமும் படித்து நீதி சொல்லப் போகின்றேனா? எதுவும் இல்லையே!

5 ஜாபாலா! இதுவரை வாய் திறக்காமல் உங்களையெல்லாம் கவனித்துக்கொண்டிருக்கிற என்னையேன் வம்புக்கு இழுக்கிறாய்?

ஜா : (சிரித்தபடி) சுவாமி! சும்மா உதாரணத்துக்காகத் தான் சொன்னேன்.

5 (முணு முணுக்கிறான்) சரியான குறும்புக்காரிடா!

ஜா : சுவாமி இப்போது சொல்லுங்கள். உங்களைப்போல எனக்கு எந்தக் குறிக்கோளும் இல்லை. அதனால் ஆசைகள் இல்லை. உங்களைப் போன்று எனக்குச் சாஸ்திர ஞானம் எதுவும் இல்லாததால், என் மனத்திலே குழப்பம் இல்லை. எனவே என் பாதை நேரானது. தெளிவானது. தடைகள் அற்றது, ஆத்ம தரிசனம் பெறச் சாதகம் செய்வோர்க்கு, வழி இப்படித்தான் இருக்க வேண்டும். இயற்கையாகவே என் வழி இப்படி அமைந்து விட்டிருக்கிறது. ஆத்ம சாதனை

யில் நான் முழு மூச்சுடன் போக வேண்டும். இது ஒன்றுதான் வழி.ஏன் எனில் எங்கு வேறொன்றையும் காண்பதில்லையோ, வேறொன்றையும் கேட்பதில்லையோ, வேறொன்றையும் அறிவதில்லையோ, அது பூமா. அளவு கடந்த நிலை. பரப் பிரம்மம். ஆத்மாவும் அதுவே, பரமாத்மாவும் அதுவே'' என்று ஞானம் வழங்கும் உபநிடதங்கள் கோஷிக்கின்றன.

5 ஜாபாலா! அதை எப்படி அடைவது?

ஜா : உபாசனு காலத்தில் ஸகுணமாயும், அனுபவ காலத்தில் - ஞானுேதயத்தில் நிர்க்குணமாயும் உள்ளது பிரம்மம். முயற்சியால் அதை அடைய வேண்டும்.

5 உருவ மற்றதை எப்படி நம் மனத்திலே கட்டிப் பிடிப்பது?

ஜா : சுவாமி! உருவமற்ற பரம்பொருளின்—பரப் பிரம்மத்தின் திருக்கோயில் குருநாதரே! ஒவ்வோர் ஜீவனும் பரமாத்மாவே தான் என்றாலும், குரு தேவரிடத்தில் அவர் விளங்கித் தோன்றுகிறார். ஆதலால் உருவமற்ற பரம்பொருளைக் குரு வடிவாய் மனத்திலே சிறைப் படுத்தினால், அங்கே பிரம்மம் தன்னைக் காட்டும்.

! எனவே உன் வழிதான் சிறந்தது என்கின்றாயா?

ஜா : ஏன், உங்களுக்கு விளங்க வில்லையா? நிச்சயமாக என் வழி நேரான வழி. இதில் நான் நிற்காமல் போவதற்கு இறைவன் அருள் செய்ய வேண்டும்.

குரல்: ஜாபாலா!

சீடர்: குருபத்தினி அழைக்கிறார்கள். ஜாபாலா!

ஜா : (உரக்க) வந்தேன்!

! (சிரித்தபடி)வந்தேன் என்பதைத் தவிர வேறு எதையுமே சொல்லத் தெரியாதா உனக்கு?

ஜா : (எழுந்து கொண்டே சிரித்தபடி) அந்த வார்த்தை ஒன்றுதான் எனக்குத் தெரியும். அந்த வார்த்தை சொல்லத்தான் நான் பிறந்தேன். நீங்கள் படியுங்கள். நான் வருகிறேன்.

குரல்: ஜாபாலா!

ஜா : வந்தேன்! வந்தேன்! (ஓடுகிறாள். கூடவே சத்யகாமனும் ஓடுகிறான். சீடர்கள் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள்) —திரை விழுகிறது.—

## காட்சி 5

[நிழற் காட்சி: ஒரு சிறுவன் ஓடிக் கொண்டிருக்கிறான். ஓர் உழவன் உருவம் நிழலாகத் திரையிலே படிகிறது. உழவன் எதிரில் அந்தச் சிறுவன் உருவம் வருகிறது. உழவன் உருவம் பையனை நிறுத்துகிறது. கேட்கிறது]

குரல்: எங்கேடா பையா! எங்கே ஓடிக் கொண்டிருக்கிறாய்?

பை : கௌதம முனிவரின் ஆசிரமத்திற்கு.

உ : அந்த ஆசிரமம் இங்கிருந்து நாலு நாள் தூரம் ஆச்சுதே!

பை : நான் இன்றைக்குள் போயாக வேண்டும்.

உ : பையா! உன்னால் போக முடியாது. இதோ பார். சாயங்காலம் வந்து விட்டது. இருட்டி விட்டால், காட்டில் உனக்கு வழி தெரியாது.

பை : கடவுள் இருக்கிறார். உனக்கு வழி காட்டுவார் என்று அம்மா சொன்னாள்.

உ : அது உண்மைதான். இன்று இரவு என் வீட்டில் தங்கி விட்டு நாளைக் காலையில், எழுந்ததும் போகலாம்.

பை : அப்படியானால் இன்றைக்குப் போய்ச் சேர முடியாதா?

உ : கட்டாயம் நீ நாளைக்குப் போகிறாய். கடவுள்தான் எனக்குச் சொன்னார். வா போகலாம்.

பை : (தயங்குகிறான்)

உ : இருட்டில் தூங்க வேண்டும். வெளிச்சத்தில் நடக்க வேண்டும். அது தானே சரி?

பை : ஆமாம்!

2 ஏலேய் பசங்களா! (சில சிறுவர்கள் ஓடி வருகிறார்கள்) இந்தப் புள்ளையைக் கூட்டிக் கொண்டு போங்கடா. கஞ்சி குடிச்சிட்டு இவனோடேயே படுத்துக்கோங்க. —திரை விழுகிறது—

## காட்சி 6

[நிலைமை விளக்கம்: ஒரு மரத்தடி. பல்லை விளக்கிக் கொண்டே இரண்டு சீடர்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]

சீ. 1 அடேய் பிரபு! அந்த ஜாபாலாவுக்குத் தான் என்ன கூர்மையான அறிவு பார்த்தாயா?

சீ. 2 அவள் இருக்க வேண்டிய இடமே வேறுடா. ஆனால் அவளோ சந்நியாச வாழ்வைத் தானே பெருமையாகப் பேசுகிறாள்.

1 அவள், சந்நியாசத்தைப் பற்றிப் பேசினால் உனக்கு என்ன?

2 அவள் ஒரு மஹாராணியாக இருக்க வேண்டியவள் ஆஹா! அவள் அழகும், வயதும், இளமையும், ஞானமும், கம்பீரமும்! அடடா! இந்தக் காட்டிலே பாழாகின்றதே!

1 அதுதான் பாலைவனத்தில் பெய்த நிலா.

2 அவ்வளவிருந்தும் அவள் மேல் நமக்குக் காமம் வருகிறதா பார்த்தாயா? தூய்மையான ஒரு சகோதரியைப் போலத் தானே இந்த நெஞ்சம் அவளைக் கருதுகிறது.

1 அடேய்! அற்புதம்டா நீ சொன்னது நானும் அதைப் பல முறை எண்ணிப் பார்த்ததுண்டு.

2 நீ மட்டும் இல்லை. நாம் எல்லோருமே இப்படித்தான் அவளைப் பற்றி அன்போடு நினைத்திருக்கிறோம்.

1. சரி. குளிக்கப் போவோமா.

—திரை விழுகிறது.—

## காட்சி 7

[நிழற் காட்சி: சிறுவன் ஓடிக் கொண்டிருக்கிறான். அவன் முதுகின் மேல் சிறு மூட்டை ஒன்று. எதிரே நான்கைந்து நாய்களுடன் தோளில் வில்லுடன் ஓர் உருவம் வருகிறது. நாய்களின் குரைப்புச் சத்தம் கேட்டுப் பையன் நிற்கிறான். வேடன் உருவம் நெருங்குகிறது. பேசுகிறது]

வே : பையா! எங்கே போறே?

பை : கௌதம முனிவர் ஆசிரமத்திற்கு.

வே : பொழுது சாஞ்சிட்டதே.

பை : அதனால் என்ன?

வே : அங்கே போக இன்னும் ரெண்டு நாள் நடையாகுமே! [நாய்கள் அவனைச் சுற்றிச் சுற்றி வருகின்றன. பையன் பயப்படுகிறான்]

வே : பையா! பயப்படாதே! நாயிங்க ஒன்னெ ஒண்ணும் செய்யாது. நாஞ் சொன்னாத்தான் கடிக்கும். பயப் படாதே!

பை : அப்படின்னு நான் எப்படிப் போறது?

வே : இண்ணைக்கி ராவுலே எங்க குடிசையிலே தூங்கு. பொழுது விடிஞ்சதும் நானே ஒன்னை இந்தக் காட்டு எல்லை வரைக்கும் வந்து உட்டுட்டு வர்றேன். வா. எங்க கூட சாப்டுட்டுத் தூங்குவே. (இருவரும் போகிறார்கள்)

—திரை விழுகிறது—

## காட்சி 8

[நிலைமை விளக்கம் : ஓர் ஆசிரமத்தின் உள்கூடம். குரு ஹாரித்ருமத கௌதமர் கட்டிலில்.அமர்ந்த நிலையில் திண்டில் சாய்ந்து கொண்டிருக்கிறார். அவர் கால்களை இரண்டு சீடர் கள்அமுக்கிக் கொண்டிருக்கிறார்கள். நான்கைந்து சீடர்கள். சுற்றிலும் நின்று கொண்டிருக்கிறார்கள். ஒருவன் பேசிக் கொண்டிருக்கிறான்.]

1 ஐயா! உடனே அது படத்தை விரித்துக்கொண்டு புஸ்ஸென்று சீறியது.

குரு : குரங்கு அதைக் கவனிக்க வில்லையா?

2 இல்லை சாமி. அப்போது அது எங்களைப் பார்த்துக் கொண்டிருந்தது

3 எங்களை இல்லை சாமி. இவனைத் தான் பார்த்துக் கொண்டிருந்தது. (அனைவரும் சிரிக்கின்றனர்)

2 ஒரு வகையில் அதுவும் சரிதான் சாமி. ஏன் என்றால் நான் தான் அது இருந்த மரத்தடியில் இருந்தேன். என் கையிலே ஒரு பெரிய பச்சை மூங்கில் தடி இருந்தது. அதனால், எங்கே அதை நான் அடித்து விடப் போகின்றனோ என்று அது பயந்திருக்கலாம். அதனால் அது என்னையே பார்த்துக் கொண்டிருந் திருக்க வேண்டும்.

குரு : பாம்பு எங்கேயிருந்தது?

2 குரங்கின் தலைக்கு மேலே.

குரு : பிறகு?
2 பாம்பு புஸ்ஸென்று சீறியவுடனே குரங்கு அதை நிமிர்ந்து பார்த்தது. அது படத்தை விரித்ததும் குரங்கு சடக்கென்று தாவி அதன் கழுத்தைப் பிடித்து விட்டது.
குரு : பாம்பு சத்தம் போடவில்லையா?
2 பாம்பு எங்கே சத்தம் போட்டது? குரங்கு போட்ட சத்தம்தான் மகாப் பயங்கரம். அது அலறிய அலறலில் நான் மிரண்டு போய் விட்டேன்.
குரு : குரங்கு நன்ருகப் பிடித்து விட்டதா?
3 ஆமாம் சாமி. பாம்பின் கழுத்து குரங்கின் கையில் வகையாக மாட்டிக் கொண்டது.
குரு : பாம்பு தப்பிக்கவேயில்லையா?
4 பாம்பு அந்தக் குரங்கின் உடம்பையே முறுக்கப் பார்த்தது.
குரு : முறுக்கி விட்டதா?
5 உகும். அதுதான் நடக்கவில்லை. விட்டால் எங்கே தன்னை அந்தப் பாம்பு கடித்து விடுமோ என்ற பயத்தால் கையைத் தூரமாகவே வைத்துக் கொண்டு ஒரு கையாலேயே மரத்துக்கு மரம் அது தாவித் தாவிக் குதித்தது.
6 சாமி! அது போட்ட கூச்சலில் கொஞ்ச நேரத்திற்குள் ஏராளமான குரங்குகள் எங்களைச் சுற்றிக் கொண்டன.
3 சாமி! அந்தப் பயத்திலே இவனுடைய பஞ்சகச்சமே நனைந்து விட்டது. (அனைவரும் சிரித்தல்)
6 (வெட்கத்துடன்) நான் அப்போதே ஆற்றிலே குளித்து விட்டேன் சாமி!
குரு : (புன்னகையுடன்) அப்புறம் அந்தக் குரங்குகள் உங்களைப் பிடித்துக் கொண்டனவா!
3 இல்லீங்க சாமி! அதும் பாஷையிலே ஏதோ சொன்னதுன்னு நெனைக்கிறேன். ஏன்னு, முதல்லே எங்களைக் கோபமாப் பார்த்த குரங்குகள் எல்லாம் பிறகு சாந்தமாய் எங்களைப் பார்த்தன.
குரு : அதனலே?
3 அதனலே எங்கமேலே ஒண்ணுந் தப்பு இல்லேன்

னுட்டு அதுங்க நினைச் சிருக்கணும் இல்லீங்களா?

குரு : பாம்பைப் பிடிச்ச குரங்கு போட்ட சத்தத்துக்கு மற்ற குரங்குகள் பதிலேதும் சொல்லலையா?

6 அய்யோ சாமி! எல்லாக் குரங்குகளும் ஏக காலத்துலே கிறீச் கிறீச் சுன்னு கத்திக் காடே அமளி துமளியா யிட்டதுங்க.

குரு : பாம்பு இன்னா ஆச்சி?

7 செத்துப் போச்சி.

6 இல்லீங்க சாமி! அது சாவலை

குரு : சாவலையா?

6 ஆமாம் சாமி. அது சாவலை.

குரு : பின்னே?

6 அழுகிப் போச்சி.

குரு : அழுகிப் போச்சா?

2 இல்லீங்க சாமி. அண்ணைக்கி ஒண்ணுமே ஆவலை.

குரு : பின்னே எண்ணைக்கி ஆச்சி.

4 ஒரு வாரம் கழிச்சி.

குரு : ஒரு வாரம் கழிச்சியா?

5 ஆமாம் சாமி. நாங்க அந்தப் பாம்பெக் குரங்கு புடிச்ச நாள் உச்சி வேளையிலேருந்து அந்தச் சாயங் காலம் வரைக்கும் காட்டுலே தர்ப்பைப் புல்லை அறுத்துகிட்டுச் சுத்திக்கிட்டு இருந்தோம். பிறகு அடுத்த வாரத்துலே அதே நாள் அதே காட்டுக்குப் போனோம். அப்பவும் அதே குரங்கைப் பார்த்தோம்.

குரு : நான் தான் அந்தப் பழைய குரங்கு என்று உன்னிடம் அது சொன்னதா? (அனைவரும் சிரித்தல்)

1 அதன் கையிலே அந்தச் செத்துப்போன பாம்பு இருந்தது சாமி.

குரு : ஒரு வேளை வேறொரு குரங்கு வேறொரு பாம்பை அதுபோலப் பிடிச்சிருந்தா?

2 எனக்கு அந்தக் குரங்கை நல்லா அடையாளம் தெரியும் சாமி.

குரு : சரி! பாம்பு என்ன ஆச்சி?

4 அழுகிப் போச்சி.

குரு : அய்யோ! அப்படின்னா என்ன ஆறது?

5 சாமி. அந்தப் பாம்பைப் பிடிச்ச கையிலே அப்படி

என்ன ஒரு சக்தி சாமி?

குரு : என்ன சக்தி?

5 பிடிச்ச பிடியெ விடவேயில்லையே. ஒரு வாரம் வரைக்கும அப்படி நம்மாலே கையை வெச்சுக்கிட்டிருக்க முடியவே முடியாது சாமி.

குரு : அதுதான் குரங்குப் பிடி என்பது.

6 ஆமாம் சாமி. அற்புதம்.

குரு : இதே மாதிரி உடும்புப் பிடி. இதே மாதிரித்தான் கரடிப்பிடி.

(ஒரு சீடன் ஓடி வருகிறான்)

வந் : சாமி! யாரோ மூன்று புதிய பையன்கள் வந்திருக்கிறார்கள்.

குரு : யார் அவர்கள்?

வந் : யாரோ அரச குமாரர்கள் போலத் தெரிகிறது. கையிலே சமித்துக் கட்டுகளுடன் வந்திருக்கிறார்கள். நான் வெளியே மரத்தடியில் உட்கார்ந்திருந்தேன். அப்போது என்னிடம் வந்து, "மகரிஷி கௌதமரின் ஆசிரமம் இதுதானே?" என்றார்கள். நான் ஆமாம் என்றேன்.

குரு : நீங்கள் யார் என்று கேட்பது தானே? எதற்காக வந்தார்களாம்?

வந் : கேட்டேன். அதற்கு அவர்கள், எங்கள் கைகளில் சமித்துக் கட்டுகளைத்தான் பார்க்கிறாயே! இன்னும் என்ன கேள்வி? நாங்கள் மகரிஷியிடம் சீடர்களாக வந்திருக்கிறோம். குருதேவரை இப்போது பார்க்க முடியுமா என்று கேட்டு வா! என்று அதட்டினார்கள். இன்னும் நின்றால் அடிப்பார்கள் போலத் தெரிந்தது. அதனால் ஓடி வந்து விட்டேன்.

குரு : சரி! அவர்களை அழைத்து வா!

(வந்தவன் போகிறான்)

(குருதேவர் இரண்டு மூன்று பேரைக் காட்டி) நீங்களும் இப்படித்தான் நான்கு ஆண்டுகளுக்கு முன்னாலே இந்த ஆசிரமத்திற்கு வந்தீர்கள்!

ஒரு : இப்போது அந்தக் கர்வம் அகங்காரம் எல்லாம் எங்கே போயிற்று என்றே தெரியவில்லை சுவாமி.

குரு : (புன்னகையுடன்) அதுதான் மகனே குருகுல வாசத்

தின் மகத்துவம்.

[மூன்று வாலிபர்கள் கைகளில் சமித்துக் கட்டு களுடன் நுழைகிறார்கள். முன்பு வந்து சொன்ன சீடனும் கூடவே வந்து ஓரத்தில் நிற்கிறான். மூன்று வாலிபர்களில் ஒருவன் முன்னே வருகிறான். அவா கள் மூன்று பேரையும் கூர்ந்து கவனித்து விட்டுக் குருதேவர் எழுந்து உட்காருகிறார். முதல வாலிபன் நெடுஞ்சாண் கிடையாக வீழ்ந்து வணங்குகிறான். சமித்துக்கட்டை அவர் பாதத்தில் வைக்கிறான. பிறகு]

வா : (நிமிர்ந்து ஆணவத்தோடு நின்றபடி) சுவாமிகள பாதங்களுக்கு வணக்கம். உஜ்ஜயினி நகரத்துப் பட்டத்திளவரசர் விக்கிரமேந்திரர் மகன் நான். என் பெயர் தனஞ்செயன். மாளுவ வேந்தரைச் சமர்க் களத்தே யானைப் போரில் வென்று, அவர் யானை யைக் கொன்று, அந்த மாளுவ மன்னரையும் கைப் பற்றிக் கொணர்ந்து, எங்கள் மன்னர் முன்னே நிறுத்திய மாவீரர் என் தந்தை. தங்களிடம் தனுர் வேதம் (வில் வித்தை) கற்க அனுப்பினார் என்னை. உம் பாதங்களை வணங்குகிறேன். என்னைத் தங்கள் சீடனாக ஏற்றருள வேண்டுகிறேன் (மீண்டும் வீழ்ந்து வணங்கி எழுந்து, இறுமாந்து நிற்கிறான்).

வா: 2 (குரு பாதத்தில் சமித்துக் கட்டை வைக்கிறான். வீழ்ந்து வணங்குகிறான். எழுந்தபின் ஆநாயசமாக நின்றபடி) என் பெயர் தர்மபாலன். தக்கிணலாடத் தின் தர்ம மகாமாத்திரரும் மன்னரின் வலது கரமு மான தர்மோ நிஷ்டர் மகன்யான் தங்களிடம் தத்துவ சாஸ்திரமும் தர்க்க சாஸ்திரமும் கற்றுக் கொள்வுதற் காக என் தந்தையார் என்னை அனுப்பி வைத்தார். என்னைத் தங்கள் சீடனாக ஏற்றருள வேண்டும். (மீண்டும் விழுந்து வணங்குகிறான்).

வா. 3 (குரு பாதத்தில் சமித்துக் கட்டை வைத்து விட்டுத் தரையில் வீழ்ந்து வணங்கி யெழுந்து) சிந்து சாம் ராஜ்யாதிபதி கேசரிவர்மரின் மைந்தன் யான். அரசி யல் சாஸ்திரமும் யுத்த தந்திரங்களும் கற்க வந்தி ருக்கிறேன். மெய்க்காப்பில் தற்காப்பு வழிகள் அனைத்தையும் கற்பித்திருக்கிறார்கள் எனக்கு. தங்கள்

அருளால் இன்னும் நிறையக் கற்றுப் பெரும் புகழ் பெறவேண்டும் என்பது என் ஆசை. என்னைத் தங்கள் மாணவனாக ஏற்றருள வேண்டுகிறேன். (மீண்டும் வீழ்ந்து வணங்கி எழுகிறான்).

[குருதேவர், அவர்கள் மூவரையும் கூர்ந்து கவனிக்கின்றார். ஒன்றுமே பேசவில்லை. அமைதி. சீடர்களும் வந்த மூன்று வாலிபர்களும் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அப்போது ஒரு சீடன் உள்ளே வருகிறான். குருதேவர் அருகில் வந்து பணிவாக]

வந் : சுவாமி ஒரு சின்னப் பொடியன் வந்திருக்கிறான். தங்களைப் பார்க்க வேண்டுமாம். கையில் சமித்துக் கட்டுடன் நிற்கிறான். மிகவும் சின்னவன். குட்டிப் பையன்.

குரு : யாரவன்?

வந் : தெரியவில்லை சாமி.

குரு : பெயரைக் கேட்பது தானே?

வந் : அவன் முகத்தைப் பார்த்ததும் அதெல்லாம் கேட்க வேண்டும என்று எனக்குத் தோன்றவில்லை.

குரு : தனியாக வந்தானா? துணையுடன் வந்தானா?

வந் : யாரோ வழிப் போக்கனுடன் வந்தான் போலத் தெரிகிறது. "இதுதான் மகரிஷி கௌதமர் ஆசிரமம். சீடப் பிள்ளைகள் இருப்பார்கள். அவர்களிடம் போய்ப் பேசு"—என்று அவனுக்குச் சொன்னதைக் கேட்டேன், போய்ப் பார்த்தால் இவன் நிற்கிறான். என்னைப் பார்த்தும் வணக்கம் சொன்னான். என்ன வேண்டும் என்றேன், குருதேவரைப் பார்க்க வேண்டும் அண்ணா என்றான். நான் உடனே உங்களிடம் வந்து விட்டேன்.

குரு : சரி! போய் அவனை அழைத்துவா. (வந்தவன் போனதும்) அவன் யாராயிருப்பான்?

சீ. 1 யாரோ வழி தவறி வந்து விட்டவனாக இருப்பான்.

சீ. 2 சுவாமி! அப்படியிருக்காது.

குரு : ஏன்?

சீ. 2 அவன் கையில் சமித்துக் கட்டு இருக்கிறதாகச் சொன்னானே உஷஸ்தி. அதனால்.

சீ. 3: அவனே வரப் போகிருன். அப்போது தெரிந்து விடுகிறது, அவன் யார் என்று.

கு : அது உண்மைதான்.

[உஷஸ்தி, அந்தச் சிறுவனைக் கையைப் பிடித்து அழைத்து வருகிருன். அனைவரும் அவனைப் பார்க்கின்ருர்கள். எல்லார் முகத்திலும் ஆச்சரியக் குறி].

உ : அதோ பார்! அவர் தான் குருநாதர்.

[சிறுவன், நேரே குருதேவரிடம் போகிருன். அவர் பாதத்தின் அருகில் சமித்துக் கட்டை வைக்கிருன். அப்படியே விழுந்து வணங்குகிருன். எல்லாரும் அவனையே பார்த்துக் கொண்டிருக்கிருர்கள். வெகு நேரமாகியும் பையன் எழுந்திருக்கவே இல்லை. குருதேவர் எல்லோரையும் ஒரு சுற்றுப் பார்க்கிருர். ஜாடையினுலேயே,. 'என்ன இவன் எழுநதிருக்கவேயில்லை, என்பது போல் கேட்கிருர். சீடர்கள் தெரியவில்லை என்பதுபோல் உதட்டைப் பிதுக்குகிருர்கள். பிறகு]

குரு : பையா! எழுந்திரு.

சிறு : உஹூம், நான் மாட்டேன்,

குரு : உனக்கு என்ன வேண்டும் சொல்லு.

சிறு : நான் உங்கள் சிஷ்யனுக வேண்டும.

குரு : யார் நீ? உன் பேர் என்ன ?

சிறு : சத்யகாம ஜாபாலன்.

குரு : உன் அப்பா பெயர் என்ன?

சத் : தெரியாது

குரு : உன் அம்மா பெயர் என்ன? அதாவது தெரியுமா?

சத் : என் அம்மா பெயர் ஜாபாலா.

குரு : (தமக்குள்) தாயை அறிவாய்! தந்தையைத் தெரியவில்லை உனக்கு உம். சரி (பையனைப் பார்த்து) உன்னை இங்கே அனுப்பினவர் யார்?

சத் : எம் அம்மா.

குரு : உம் எழுந்திருடா பொடியா, எழுந்து பேசு!

சத் : நான் எழுந்திருக்க மாட்டேன்.

குரு : சரி. உனக்கு என்ன வேண்டும். அதையாவது சொல்.

சத் : என்னை உங்கள் சிஷ்யனுக ஏற்றுக்கொள்ளவேண்டும்.

குரு : சரி. என்னிடம் என்ன படிக்கப் போகிருய்?

சத் : ஞானம்!

குரு : (வியப்புடன்) ஞானமா? (எல்லாரையும் பார்க்கிறார். எல்லார் முகத்திலும் வியப்பு, ஏளனம்)

சத் : ஆமாம்!

குரு : யார் சொல்லிக் கொடுத்தார்கள் உனக்கு இப்படி?

சத் : என அம்மா.

குரு : என்ன என்று?

சத் : உலகத்திலேயே பெரிய செல்வம் - அழியாத செல்வம் ஞானம் ஒன்று தான். நீ அதன் மேல ஆசைப்பட வேண்டும் என்று சொன்னாள். அதனால் எனக்கு அதன மேல் ஆசை வந்தது.

குரு : அதற்கு இங்கு ஏன் வந்தாய்?

சத் : அந்த ஞானம் எங்கேயிருக்கிறது என்று அம்மா விடம் கேட்டேன். அது அடர்ந்த கானகங்களிலே இருக்கிறது என்று சொன்னாள். அங்கே அது யாரிடம் இருக்கிறது என்று கேட்டேன். பகவான் கௌதம மகரிஷியிடம் இருக்கிறது என்றாள் எப்படி வாங்கிக் கொள்வது என்று கேட்டேன். தனியாகச் சமித்துக் கட்டுடன் அவரிடம் போ என்றாள். எனக்கு வழி தெரியாதே என்றேன். கடவுள் வழி காட்டுவார் என்றாள். அம்மா சொன்னபடியே உங்களிடம் வந்து விட்டேன் சுவாமி.

குரு : நல்லது. ரொம்ப நல்லது. பையா! உனக்கு நான் ஞானம் போதிக்க வேண்டும் என்றால் எனக்கு தட்சிணை கொடுக்க வேண்டுமே! அதைக் கொண்டு வந்திருக்கிறாயா?

சத் : இல்லை.

குரு : தனம் இல்லாதவனுக்கு ஞானத்தைப் போதிக்கக் கூடாதே! சரி! உன குலம் என்ன? கோத்திரம் என்ன?

சத் : தெரியாது.

குரு : அதுவும் தெரியாது. சரி பையா! எழுந்திரு.

சத் : உஹும். நான் மாட்டேன். என்னைச் சீடனாக ஏற்றுக் கொள்வதாக இன்னும் சொல்லவில்லையே நீங்கள்.

குரு : சொல்வதைக் கேள். இப்போது எழுந்து நீ உன் அம்மாவிடம் போய் உன் அப்பா பெயர், குலம், கோத்திரம் எல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு,

எனக்குத் தட்சிணைக்குப் பொன்னே பொருளோ வாங்கிக் கொண்டுவா.

சத் : வந்தால்?

குரு : வந்தால், உன்னை என் சீடனாக ஆக்கிக் கொள்ள முடியுமா? என்று யோசிக்கிறேன். சரிதானா?

சத் : உம். (தலையை ஆட்டுகிறான்)

குரு : நல்லது. இப்போது எழுந்து கொள்.
(எழுந்து கும்பிட்டு நிற்கிறான்)
போய்வா. (ஓட்டமாய் ஓடி மறைகிறான்)
[தமக்குள் முணுமுணுக்கிறார்] ஞானம் வேண்டும். எந்தச் சொல்லுக்குமே பொருள் தெரியாத வயது. வேட்கையோ அதிகம். மாபெரும் மன்னர்களின் மகன்களும், மதிமந்திரிகளின் மகன்களும் பயிலும் இந்தக் கூடத்திலே, ஞானத் தாகத்தோடு ஒரு தும்பியும் பறந்து வருகிறது. ஓம் தத்ஸத்.

— திரை விழுகிறது —

## காட்சி 9

[நிலைமை விளக்கம்: ஆசிரமத்தின் முன் கூடத்தில் தனியாக அமர்ந்தபடித் தாமரைத் தண்டிலிருந்து நாரை உருவி எடுத்துக் கொண்டிருக்கிறாள் ஜாபாலா. வெளிப் பக்கத்திலிருந்து இரண்டு சீடர்கள் அவளருகில் வருகின்றார்கள்].

சீ. 1: என்ன ஜாபாலா! உன் வேலை இன்னும் முடியவில்லையா?

சீ. 2: மிகவும் கர்ம சிரத்தையோடு அப்போதிலிருந்து செய்து கொண்டிருக்கிறாயே!
[ஜாபாலா, அவர்களை நிமிர்ந்து பார்த்துப் புன்னகை செய்கிறாள் ]

சீ. 1: ஜாபாலா! எங்கே சத்ய காமன்?

ஜா : ஹாரித்ருமத கௌதமர் ஆசிரமம் போயிருக்கிறான்.

சீ. 2: அந்தப் பொடியன் இல்லாமல் இந்த ஆசிரமமே நன்றாக இல்லையே.

சீ. 1: பாவம்டா நாம்.

சீ. 2: உனக்குத்தான் அவனைப் பற்றிய கவலையே இல்லை.

ஜா : மாட்டுப் பிள்ளைகளாகிய உங்களுக்கே அவனைப்

பிரிந்த ஏக்கம் வாட்டுகிறதே! எனக்கு எப்படி இருக்கும்?

சீ. 1: என்ன ஆச்சரியம்! உனக்கும் அவன்மேல் அவ்வளவு அன்பிருக்கிறதா?

சீ. 2: அதனுல்தான் அவனைப் பிரிந்து கண்ணீர் கங்கையாக உன் கண்களிலிருந்து பெருகுகிறதா?

சீ. 1: தெரியாமலா சொன்ஞர்கள் பெத்த மனம் பித்து என்று. ஆஹா ஆஹா! உன தாய்ப் பாசமே பாசம!

— திரை விழுகிறது —

## காட்சி 10

[நிலைமை விளக்கம்: சத்யகாமன் ஓடி வந்து கொண்டிருக்கிருன். வழியில் வேடன் வில்லுடன் நான்கு நாய்களுடன் எதிர்ப்படுகிருன். நாய்கள் சத்யாவைக் கண்டதும குரைக்கின்றன. அவன் நிற்கிருன். வேடன் விசாரிக்கிருன்].

வே : என்ன புள்ளே! ஏன் திரும்பிட்டே! அந்தக் கெழவன் உன்னை சிஷ்யப் புள்ளையா ஏத்துக்கிலியா?

சத் : தெரியல்லியே!

வே : ஏன் பின்னே திரும்பிட்டே?

சத் : அப்பா பேரு என்னன்னு கேட்டாரு. தெரியாது'ன்னு சொன்னேன்.

வே : அடப்பாவி! ஏன் அப்படிச் சொன்னே? தப்பில்லே யா?

சத் : உண்மையாகவே எனக்குத் தெரியாதே!

வே : அந்தக் கெழவன் வேறு என்ன கேட்டுது?

சத் : தட்சிணைக்குப் பொருள் கொண்டு வந்தியா'ன்னு கேட்டாரு.

வே : நீ என்ன சொன்னே?

சத் : கொண்டு வரல்லென்னேன்.

வே : அதுக்கு?

சத் : போயி வாங்கிட்டுவா'ன்னு சொன்ஞரு. போகிறேன்.

— திரை விழுகிறது —

## காட்சி 11

[நிலைமை விளக்கம்: கானக வழியில் ஒரு தபோதனர் குடில். உள்ளேயிருந்து ஒரு துறவி வெளியே வருகின்றார். திரும்பி நின்று குரல் கொடுக்கிறார். மற்றவர் எட்டிப் பார்க்கிறார். சத்யகாமன் அந்த வழியில் ஓடி வந்து கொண்டிருக்கிறான்].

து. 1: [அவனைப் பார்த்துக் கையை ஆட்டி] அடேய்! எங்கே ஓடிக் கொண்டிருக்கிறாய்?

சத் : என் அம்மாவிடம்!

து. 1: ஏன்?

சத் : என் அப்பா பெயரைக் கேட்டு வருவதற்கு! (சொல்லிக் கொண்டே ஓடி மறைகிறான்)

து. 2: இரண்டு நாளைக்கு முன்னால் கௌதமர் ஆசிரமம் போன பையன் தானே இவன்?

து. 1: ஆமாம்!

து. 2: அந்த நான்கு பேரில் ஒருவன் தானே இவன்?

து. 1: இல்லை இல்லை. மூன்று பேர் முதலில் போனார்கள். இவன் பிறகு தனியாகப் போனான்.

து. 2: ஏன் மீண்டும் திரும்பி ஓடிக் கொண்டிருக்கிறான்?

து. 1: அவன்தான் காரணம் சொன்னானே!

து. 2: ஏன்? தந்தை பெயர் தெரியாதவனா? அல்லது அவன் தந்தை பெயரைச் சர்வக்ஞராகிய பகவான் கௌதமர் தான் அறிய மாட்டாரா?

து 1: (நகைத்தபடி) நமக்கே புரிபடாதது அவர் ஞானம்! அந்த மஹானுடைய செயல்களுக்குக் காரணத்தைக் கேட்கவோ, விளக்கங்களை ஆராயவோ நாம் யார்? அவர் எதைச் செய்தாலும் அதில் ஏதாவது ஒரு காரணம் இருக்கும்.

து. 2: உண்மைதான்! (பெருமூச்சுவிட்டு) மிகவும் பொடியன். மான்குட்டிபோல் ஓடுகிறான். அவன் தாய் பரிசாரிணி ஜாபாலா அல்லவா?

து. 1. ஆமாம்! அன்று அப்படித்தான் சொன்னான்!

து. 2: நான் அவளைப் பார்த்திருக்கிறேன். மிகவும் தெளிந்த விவேக முடையவள்.

து. 1: அதனுல் தான் இந்தப் பிஞ்சுப் பருவத்திலேயே அவனைக் கௌதமரிடம் அனுப்பி வைத்திருக்கிருள்.
து. 2: காட்டு வழியில் வன விலங்குகளால் ஆபத்து ஏதும் ஏற்பட்டு விடக் கூடாது அவனுக்கு பாவம் மிகவும் சிறிய குழந்தை.
து. 1: துறவி! உமக்கெதற்கு அந்தக் கவலை? அவனுக்குத் துன்பம் வந்தாலென்ன? இன்பம் வந்தாலென்ன? நீர் சென்று அவனைக் காப்பாற்ற முடியுமா? சும்மா இரும். — திரை விழுகிறது —

## காட்சி 12

[நிழற்காட்சியில் பையன் ஓடி வருவதும், கலப்பையைத் தோளில் தாங்கி வரும் ஒருவன் அவனைத் தடுத்து நிறுத்து வதும் தெரிகின்றன. குரல் கேட்கிறது]

கு. 1: என்னடா பையா! என்ன? திரும்பி வந்துட்டே?
கு. 2: அம்மாகிட்டே போறேன்.
கு. 1: என்ன விஷயம்?
கு. 2: அப்பா பேரு கேட்டுவா'ன்னு குருநாதர் சொன்னுரு.
கு. 1: ஓகோ! அதனுலே தான் ஓடிவர்றியா! போ போ, பத்திரமா போய் வா.

— திரை விழுகிறது —

## காட்சி 13

[நிலைமை விளக்கம்: ஓடைக் கரையோரம். ஜாபாலா துணி துவைத்துக் கொண்டிருக்கிருள். முச்சிறைக்கப் பையன் ஓடோடியும் வருகிருன். வந்து அப்படியே தாயை முதுகுப் புறத்தில் கட்டிக் கொள்கிருன்]

பை : அம்மா!
ஜா : மகனே! (திரும்பிப் பார்த்து வாரி அணைத்து உச்சி மோந்து) ஏனடா வந்து விட்டாய்! கௌதம மகரிஷி யைச் சந்தித்தாயா? அவர் பாதத்தில் வீழ்ந்து வணங்கினுயா? உன்னை அவர் சிஷ்யனுக ஏற்றுக் கொண்டாரா? நீ ஏன் திரும்பி வந்து விட்டாய்? ஏனிப்படி இறைக்க இறைக்க ஓடிவருகிருய்? வழியில்

ஏதாவது சாப்பிட்டாயா இல்லையா? என்னடா இப்படி ஒரேயடியாய்க் கருத்து இளைத்து விட்டாய்? (மீண்டும் அவனை அப்படியே வாரி எடுத்து அணைத்துக் கொள்கிறாள்).

சத் : அம்மா! (அவள் முகத்தைத் தடவிக் கொடுத்து) அவர் என்னை ஏற்றுக் கொள்வார்.

ஜா : அவர் சொன்னாரா?

சத் : இல்லை.

ஜா : பிறகு எப்படி நீயாகச் சொல்கிறாய்!

சத் : உன் அப்பா பெயர் என்ன என்றார். தெரியாது என்றேன். காணிக்கைக்குப் பொன் கொண்டு வந்தாயா என்றார். இல்லை என்றேன். ஏன் என்றார். எங்களிடம் இல்லை என்றேன். இதற்கெல்லாம் உன் தாயிடம்போய் விடை தெரிந்து கொண்டு தட்சிணைக்குப் பொன்னோ பொருளோ கொண்டுவா என்றார். நான் ஓட்டமாய் ஓடி வந்து விட்டேன்.

ஜா : தட்சிணை கொண்டு போனால் உன்னைச் சிஷ்யன் ஆக்கிக் கொள்வதாகச் சொன்னாரா?

சத் : இல்லை.

ஜா : பிறகு!

சத் : அப்போது யோசிப்பதாகச் சொன்னார்!

ஜா : சரி வா. ஆசிரமத்திற்குப் போய்ப் பேசலாம். [ஈரத்துணிகளை எடுத்துக் கொண்டு புறப்படுகிறாள். சத்யனும் குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு தாயின் பின்னால் செல்கிறான்]

— திரை விழுகிறது. —

## காட்சி 14

[நிலைமை விளக்கம்: இடம்: காட்டில் ஒரு குடில். வேடனும் அவன் மனைவியும் உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். வேடன் ஒரு தோலுக்கு உப்பையேற்றிக் கொண்டிருக்கிறான். அவன் மனைவி ஒரு கூடையை முடைந்து கொண்டிருக்கிறாள்]

வே : மனைவி ஏன்'யா! அந்தப் புள்ளெ ஒருத்தென் ஓடுனானே மான் குட்டியாட்டம் முந்தா நாளு!

வே : ஆமாம் போ. அவன் ஓடிப் பத்து நாளு ஆவுதுபுள்ளெ.

ம : எங்க போனுன் அப்படி?
வே : கேட்டு வந்து சொல்றேன்.
ம : (சிணுங்கலுடன்) இது தானே வாணுங்கறேன்.
வே : பின்னே எனக்கென்னடி தெரியும்?
ம : நீ தான் சுத்திச் சுத்தி வர்றியே இந்தக் காட்டெ. அதுனுலே ஒனக்குத் தெரியும்'னு நெனச்சுக் கேட்டேன்.
வே : அப்படியா? அப்படின்னு கேளு, பதினஞ்சு நாளைக்கி முன்னுலே நம்மக் காட்டுக் குடிசையெத் தாண்டி அந்தபுள்ளெ, கையிலே தர்ப்பைப் புல்லுக்கட்டு எடுத்துக்குணு அந்தக் கெயவரு கிட்டே போனுன்.
ம : அதாரு?
வே : அதாண்டி! இங்கேருந்து நாலு நாள் நடையிலே ஒரு கெயவரு கீருரே! கௌதமரு, கௌதமரு'ன்னு, இந்தப் பக்கமாப் போற சந்நியாசிங்க கூடப் பேசிக்கு வாங்களே! அந்தக் கெயவரு.
ம : ஓ! அதுவா! இருவது முப்பது பேரோட போகுமே! பெரிய எடத்துப் பசங்கள்ளாம் அதுங்கூடவே போகுமே! அந்தக் கெயவனெ நாங்கூடப் பாத்திருக்கிறேன் உம். சொல்லு
வே : அந்தக் கெயவருகிட்டே பாடம் படிக்கிறதுக்கு இந்தப் புள்ளெ போச்சி.

— திரை விழுகிறது —

## காட்சி 15

நிலைமை விளக்கம்: ஒரு குடிசையின் வெளிப்புறம். சத்யகாமனை அன்போடு தழுவிக் கொண்டு ஜாபாலா சிறிது நேரம் நிற்கிருள். பிறகு அவன் நெற்றியிலே கன்னத்திலே முத்தமிடுகிருள்].

ஜா : மகனே! சத்யகாமா! சொன்னதெல்லாம் நினைவிலே இருக்கிறது அல்லவா?
ச : ஆம் அம்மா.
ஜா : எல்லாப் பொருள்களையும் எடுத்துக் கொண்டாய் அல்லவா?
ச : எடுத்துக் கொண்டேன் அம்மா!

ஜா : அவர் பாதம் தான் உனக்குக் கதி மகனே!
ச : சரி அம்மா!
ஜா : போய் வா மகனே!
ச : (தரையில் விழுந்து வணங்கி எழுந்து) போய் வருகிறேன்'மா.
ஜா : வெற்றி பெற வேண்டும்.
ச : சரி அம்மா.
ஜா : திரும்பி வரும்போது நீ பெரிய்யவனுக இருக்க வேண்டும்.
ச : (சிரித்தபடி வானத்திற்குக் கையைக் காட்டி) இவ்வளவு பெரியவனுக வருவேன். வரட்டுமா அம்மா!
ஜா : போய்வா மகனே!
[சத்யா போவதும் திரும்பிப் பார்ப்பதும் கையைக் காட்டுவதுமாகப் போகிருன். போய்க் கொண்டே இருக்கிருன். அவன் உருவம் மறைந்ததும் திரும்புகிருள்].
(குளோசப்பில் அவள் முகம் தெரிகிறது. துக்கத்தால் விம்முகிருள். கண்ணில் வழியும் கண்ணீரை விரலால் துடைத்து எறிகினருள். அதே கணத்தில் திட்டமாகத் திருப்பித் தன் குடிசைக்குள்ளே புகுந்து, மறுகணமே இடுப்பில் ஒரு குடத்துடன் வெளியே வந்து வேறு திசையில் நடக்கத் தொடங்குகிருள்).

— திரை விழுகிறது —

## காட்சி 16

[நிலைமை விளக்கம்: ஆசிரம உள் கூடம் சீடர்கள், சுற்றிலும் நிற்க, கௌதம முனிவர் கட்டிலில் சாய்ந்த நிலையில் இருக்கிருர். அப்போது ஒரு சீடன் வெளியிலேயிருந்து வந்து]
சீ : சுவாமி! ஜாபாலன் வந்து கொண்டிருக்கிருன்.
கௌ: எவ்வளவு தூரத்தில் வருகிருன்?
சீ : ஆசிரமத்தை நெருங்கி விட்டான் சுவாமி!
கௌ: அவனை அழைத்து வா! (சீடன் போகிருன்)
அவன் ஊர் இங்கிருந்து வெகு தூரமோ?
சீ.2 : மான் காட்டிற்கும் அப்பால் இருப்பதாகக் கேள்வி.

கௌ: நீ போய் இருக்கிறாயா? [எழுந்து உட்காருகிறார்]
சீ. 2 : இல்லை சுவாமி!
கௌ: பிறகெப்படி உனக்குத் தெரியும்?
சீ. 2: இங்கு வரும் குன்றக் குறவன் சொன்னான்.
(சீடன், சத்யகாமன் இருவரும் உள்ளே நுழைகிறார்கள். சத்யா, தான் கொணர்ந்த மூட்டைகளை ஓர் ஓரமாக வைத்து விட்டு, அவர் பாதத்தில் தலை வைத்து, வீழ்ந்து வணங்குகிறான்,
கௌ: (ஆசீர்வாதம் பண்ணுகிறான்)
ச : (வணங்கியபடியே) குருவே! வந்து விட்டேன்.
கௌ: அதுசரி. எழுந்திரு.
ச : மாட்டேன்.
கௌ: ஏன்?
ச : என்னை உங்கள் சீடனாக ஏற்றுக் கொண்டதாக இன்னும் சொல்லவில்லையே!
கௌ: நீ எழுந்தால் தானே நான் சொல்வதற்கு!
ச : உஹீம் நான் மாட்டேன். நீங்கள் சொல்லும் வரை-எழுந்திருக்க வேண்டாம் என்று அம்மா சொன்னாள்.
கௌ: சரி. காலையாவது விடுடா.
ச : மாட்டேன்.
கௌ: ஏன்?
ச : இந்தப் பாதம் தான் என் கதி என்றும் சொன்னாள்.
கௌ: சரி. வேறு என்ன சொன்னாள்?
ச : அந்தப் பாதங்களை விட்டு விடாதே. கெட்டியாகப் பிடித்துக் கொள் என்றும் சொன்னாள்.
கௌ: வேறு என்ன சொன்னாள்.
ச : நீங்கள் கேட்டவற்றிற்குப் பதிலும் சொன்னாள்.
கௌ : ஓ! கேள்விகளுக்கு விடை தெரிந்து கொண்டு வந்திருக்கிறாயா?
ச : (ஆர்வத்துடன்) ஆமாம் சாமி! தெரிந்து கொண்டு வந்து விட்டேனே!
கௌ: உம் சரிதான். உன் தந்தையார் பெயர் என்ன?
ச : தெரியாது சாமி!
கௌ: ஏன்? கேட்க மறந்து போனாயா?
ச : இல்லை சாமி. கேட்டேன்.
கௌ: பிறகு ஏன் தெரியவில்லை என்கிறாய்?

ச : என் அம்மாவுக்கே அது தெரியவில்லையாம்.

கௌ: ஏன்?

ச : ஏன் என்று கேட்டேன். சிறிது நேரம் சும்மா இருந்தாள் பிறகு யோசித்தாள். [குருதேவர் மற்ற சீடர்களின் முகங்களைப் பார்க்கிறார். சீடர்கள் எல்லாரும் சத்யகாமனையே ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் பையனைப் பார்த்து].

கௌ: நான் கேட்டு வரச்சொன்னதாகச் சொல்வதுதானே?

ச : சாமி கேட்டு வரச் சொன்னார், என்று தான் சொன்னேன்.

கௌ: அதற்கு என்ன சொன்னாள்?

ச : நான் சொல்வதைச் சாமியிடம் அப்படியே சொல்லு, என்று சொலலிவிட்டு இதைச் சொன்னாள். ''நான், வயது வருவதற்கு முன்னாலிருந்தே ஆசிரமங்களில் பரிசாரிணியாக இருந்து வந்திருக்கிறேன். பல ரிஷிகளுக்குத் தொண்டு செய்து வந்திருக்கிறேன். அவர்களில் எந்த ரிஷிக்கு நீ பிறந்தாய் என்று எனக்குத் தெரியவில்லை. என் பெயர் ஜாபாலா. உன் பெயர் சத்யகாமன். அதனால் என் பெயரிலிருந்தே ஒரு பெயரை உருவாக்கி உனக்குச் சத்யகாம ஜாபாலன என்று நாமகரணம் செய்தேன் என்று சொன்னாள்!

கௌ: உம் சரி உன் குலம் என்ன? கோத்திரம் என்ன?

ச : என் தந்தை யார் என்பதே தெரியாதபோது எனக்குக் குலமும் இல்லையாம். கோத்திரமும் இல்லையாம். [கௌதமர் அனைவர் முகத்தையும் பார்க்கிறார். சீடர்கள் முகத்தில் அருவெறுப்பும் கோபமும் சுடர் விடுகின்றன.]

கௌ: சத்யகாமா! எனக்குத் தட்சிணை கொடுக்க என்ன கொண்டு வந்திருக்கிறாய்?

ச : குருவே! அதோ அந்தப் பையில் உங்கள் பொக்கை வாய்க்குத் தகுந்த சோளப் பொரியும், கரும்புச் சாற்றிலே ஊறவைத்த அவலும் கொடுத்தனுப்பினாள் அம்மா! இது என் முதல் தட்சிணை.

கௌ: ஹா ஹ்ஹா! (என்று சிரித்துவிட்டு) தட்சிணையிலே முதல் தட்சிணை என்று கூட உண்டா என்ன? ஏய் பொடியா!

ச : தாங்கள் பூஜை செய்யும் அகல் விளக்கிலே தீபம் ஏற்றுவதற்காகத் திரி கொடுத்தனுப்பியிருக்கிருள். நல்ல நேரத்திலே எடுத்துச சுத்தமாக்கிச் சுருட்டி வைத்திருசகிற, தாமரைத தண்டு நூலின சுருணை கள் ஐந்து கொடுத்தனுப்பியிருக்கிருள். இது தங்கள் பூஜைக்கு. இது என் இரண்டாவது தட்சிணை

கெ : ஆகா! ஆகா! சீடர்களே! கேட்டீர்களா! தாமரைத் தண்டு நூலிலேயிருந்து எடுத்த திரி. அந்தத் திரியை அகலிலே இட்டு, இலுப்பெண்ணெய் ஊற்றித் தீபம் ஏற்றிஞல், சுடர், முத்துப்போல் ஜொலிக்கும். தெய்வங்கள் யாவும் வசப்படும். தியானம் தானே கூடும். நன்மையே பெருகும். உம் நல்லது. நல்லது அப்புறம் பையா. வேறு ஏதாவது தட்சிணை உண்டா?

ச : சுவாமி! தங்களுடைய எந்தச் சிறிய வேலையாஞலும் அதைச் செய்து முடிக்கவும். தங்கள் பாதத்தண்டை காத்திருக்கவும், பயன்படுவதற்காக இந்த என உடம்பு இனி உங்களுடையது என்று சொல்லி அனுப்பியிருக்கின்ருள் இந்த என் உடம்பு உங்களுக்கு மூன்ருவது தட்சிணையாகும.

கெ : பேஷ்! பேஷ்! இன்னும் ஏதாவது உண்டா?

ச : "இந்த மூன்று தட்சிணைகளையும் ஏற்றுக் கொண்டு என் மகனுக்கு அருள் செவ்வாய் பிரபு" — என்று உங்கள் பாதங்களை வணங்குகிருள் அம்மா, என் மன்ருட்டை ஏற்றுக் கொள்ளுங்கள் சுவாமி! என்றும் சொல்கிருள் அம்மா [மற்றவர்கள் முகத்தில் ஈயாட வில்லை]

கெ : நல்லது நல்லது வேறு என்ன சொன்ஞள்?

ச : நான் திரும்பிப் போகும் போது (நீட்டி முழக்கிச் சொல்கிருன்) பெரிய்ய்யவஞக வரவேண்டும் என்றும் சொன்ஞள்.

கெ : உம் மகனே! எழுந்திரு.

ச : மாட்டேன்.

கெ : ஏன்? நீதான் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் சொல்லி விட்டாயே. ஒரு தட்சிணைக்குப் பதில் மூன்று தட்சிணைகள் கொண்டு வந்திருக்கிருயே. இன்னும் என்ன? எழுந்திரு.

ச : மாட்டேன், என்னைச் சீடனாக ஏற்றுக் கொள்வதாக இன்னும் சொல்லவில்லையே!

கௌ: (புன்னகையுடன்) குழந்தாய் சத்யகாமா! சொல்லு கின்ற சொல்லுக்கு அர்த்தம் தெரியாத பருவத்திலே என்னை வந்து நீ பற்றியிருக்கிறாய்! எல்லாம் இறை வன் திருவருள். சத்யகாமா!

ச : சுவாமி!

கௌ: உன்னை ஒன்று கேட்கட்டுமா?

ச : உம் கேளுங்கள் சுவாமி.

கௌ: உன் அம்மா மேல் உனக்கு அன்பு உண்டா?

ச : ஏன் சுவாமி?

கௌ: உன் தாய் உத்தமி! நல்லவள். மாசற்றவள். உலகத் துக்காக அஞ்சி வெட்கப்பட்டுப் பொய்யைச் சொல்ல வில்லை அவள். உண்மையை உண்மையாகவே சொல்லியிருக்கிறாள். சத்தியம் என்றும் சத்தியமே! மகனே! உன் தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை மகனே சத்ய காமா?

சத் : சுவாமி!

கௌ: உன் அம்மாவுக்கு உன்மேல் மிகவும் அன்பு அப்படித் தானே

ச : ஆம் சுவாமி!

கௌ: என்னிடம் படிப்பதற்கு எல்லாரும் வந்து விட முடி யாது. சரிதானா?

ச : சரி சாமி!

கௌ: எல்லாரையும் ஏற்றுக்கொள்ள மாட்டேன் நான். சரி தானா?

ச : சரி சாமி!

கௌ: ஏன் தெரியுமா?

ச : தெரியாது சாமி!

கௌ: தெரிந்து கொள்.

ச : சரி சாமி!

கௌ: உன் அம்மாவுக்காகத்தான் உன்னை நான் என் சீடனாக ஏற்றுக்கொள்கிறேன். ஏன் தெரியுமா?

ச : தெரியாது சாமி.

கௌ: உன் அம்மா உண்மையே சொன்னாள். சத்தியமே பேசினாள். சத்தியம் பேசுகிற நாக்கிலே பராசக்தி

கொலு விருப்பாள். யார் கொலுவிருப்பாள்?

ச : பராசக்தி.

கௌ: யார் நாக்கிலே?

ச : சத்தியம—உண்மை பேசுகிறவர்கள் நாக்கிலே.

கௌ: அப்படிச் சத்தியமாகப் பேசியது யார்? உன் அம்மா! யார் சொல்லு?

ச : என் அம்மா!

கௌ: அதனுல், அவள் மகனுன நீயும் சத்தியமே பேசுகிருய். என்ன பேசுகிருய்?

ச : சத்தியமே பேசுகிறேன்.

கௌ: சத்தியத்தின்மேல் காதல்கொண்ட உன்னை, நாங்கள் உண்மையான சத்தியகாமன் என்றே அழைப்போம்! என்ன சரியா?

ச : சரி சாமி!

கௌ: என்னடா பயலே! எங்களைப் பார்த்துச் சரி-தவறு சொல்ல வநதவனே நீ? எதற்கெடுத்தாலும் சரி சரி என்கின்ருயே! (எல்லோரும் கொல்லெனச் சிரித்தல்) மகனே குழந்தாய்! சத்யம் பரம் தீமஹி! சொல்லு. சத்யம் பரம் தீமஹி!

சத் : சத்யம் பரம் தீமஹி!

கௌ: உன் அம்மாவை எப்போதும் நீ வெறுக்கக் கூடாது. வெறுப்பாயா?

ச : இல்லை சுவாமி!

கௌ: வெறுக்க மாட்டேன் என்று சொல்.

ச : வெறுக்க மாட்டேன்.

கௌ: எழுந்திரு,

ச : என்னைச் சீடனுக ஏற்றுக் கொள்வதாக இன்னமும் நீங்கள் சொல்லவில்லையே!

கௌ: உன் தாயின் வேண்டுகோளுக்கிணங்கி உன்னை நான் என் சீடனுக ஏற்றுக் கொள்கிறேன்.

ச : அப்படியே சுவாமி!

கௌ: (தனக்குள்) அலைகின்ற மனத்தோடு தவஞ் செய்யும் முனிவர்கள் மத்தியிலே, அலையாத மனத்தோடு அவர்களுக்குப் பணிவிடை செய்வதையே பாக்கியம் எனக் கருதி வாழும் ஒரு புண்ணியவதி உன் தாய்!

[வானத்தை அண்ணாந்து பார்த்து. கையை உயர்த்தி உரத்த குரலில்]
மகளே! ஜாபாலா! நீ உத்தமி! உனககு மங்களம் உண்டாகட்டும். (ஆசீர்வதிததல்)
குழந்தாய்! சத்ய காமா!

ச: சுவாமி!

கௌ: என் பொக்கை வாய்க்கு இதமாக, உன் அம்மா, சோளப் பொரியும், ருசியாகக் கரும்புச் சாற்றிலே தோய்த்த அவலும் கொடுத்து அனுப்பியிருககிருள். என் பூஜையிலே, அகலின் ஜோதி, முத்துச் சுடர் போல பொங்கி ஒளி வீசுவதற்குத் தாமரைத் தண்டு நூலாலே திரியும் கொடுத்திருக்கிருள். என் குரு நாதர் எனக்குத் தந்த ஞானத்தை வைத்துப் போவதற்காகத் தகுந்த பாத்திரமாக உன்னையும் தந்திருக்கிருள். மகனே! இந்த மூன்று தட்சிணைகளையும் நான் ஏற்றுக் கொண்டேன். ஒழுக்கம் தவறிப் பெற்ற பிள்ளை யென்று உலகம் ஒதுக்கப்போகும் உன்னை, உலகம் போற்றும் ஞானியாக்குவேன். என் குருநாதர் எனக்கிட்ட பிச்சை, இதோ நான் பெற்ற இந்த ஞானம். இனி அது உன்னுடையது. இன்று முதல், இதோ இநதக் கணம் முதல் நீ என்னுடைய சீடன். நாளைக்கு உனக்குப் பிரம்மசரிய நோன்பைத் தொடங்கி வைக்கிறேன்.

ச: சரி சுவாமி.

கௌ: (பிற சீடர்களை நோக்கி) சீடர்களே! உலக விவகாரங்களிலே வெற்றி பெறுவதற்கும், புகழ் பெறுவதற்கு மான சாஸ்திரங்களைக் கோரி நீங்கள் எல்லாரும் வந்திருக்கிறீர்கள். ஆனல் இவன் ஒருவனே, என்றும் அழியாத ஞானச் செல்வத்தைப் பிச்சை கேட்டு என்னிடம் வந்திருக்கிருன். ஞானம் ஒன்றே எதனையும் வேண்டாதது. "நம்முடைய இந்த உடம்பே பரப் பிரம்ம நகரம். இதிலே, தாமரை மொக்கின் வடிவமைந்த ஒரு மாளிகையுண்டு. அதன் உள்ளே உள்ளமைந்ததான ஒரு சிறிய ஆகாயம் (வெட்டவெளி) உண்டு. அதனுள்ளே இருப்பது எதுவோ அதை ஆராய வேண்டும். உண்மையாகவே அதை உணர்ந்

தறிவதற்கு ஆசைப்பட வேண்டும்''.
[சாந்தோக்கிய உபநிடதம் 8, 1, 4]
இந்த ஞானம் ஒன்றாலே, உலகை விலை பேசலாம். ஞானம் ஒன்றாலே புகழை நிலை நிறுத்தலாம். ஞானம் ஒன்றாலே நன்மை செய்யலாம். அது யாரையும் அழிக்காது யாரையும் கொல்லாது. அது யார் மனத்தையும் நோகப்பண்ணாது. ஞானம் வேறு, கடவுள் வேறு இல்லை. கடவுளின் உருவமே ஞானம். ஞானத்திற்குப் பெயரே கடவுள். அந்த ஞானத்தை இந்தச் சிறு பாலகன் அடைவான் இது சத்தியம்.
(பையனை நோக்கி) மகனே! எழுந்திரு! வானிலே சுடர் விடும் துருவ நட்சத்திரம் போல நீ ஜொலிப்பாய்! உலக ஞானிகளிலே நீயும் ஒருவனாவாய்! என்னுடைய சற்குருவின் திருப்பாதம் உன் தலை மேல் நிற்கட்டும். என்னை நீ வணங்குவது எல்லாம் என் சறகுருவைப் போய்ச் சேரட்டும். என் குருவின் திருவருள் உன்னிடம் தழைக்கட்டும். மகனே! சத்யகாமா! எழுந்திரு உன்னை நான் என் சீடனாய் ஏற்றுக் கொண்டு விட்டேன். எழுந்திரு.
[சத்யகாமன் எழுகின்றான். அவர் பாதங்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டு தலை குனிந்து நிற்கிறான்]

கௌ: என் காலைச் சிறிது பிடித்து விடு!
[சத்யகாமன் அவர் அருகில் தரையில் அமர்ந்து அவர் காலைப் பிடித்து விடுகின்றான். அவன் முகத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது.]

கௌ: சத்யகாமா: தலை நிமிர்ந்து என்னைப் பார்!

ச: ஊஹூம். நான் மாட்டேன்.

கௌ: ஏனும்? நான் தான் உன்னை என் சீடனாக ஏற்றுக் கொண்டேனே! என்னைப் பார்.

ச: ஊஹூம். நான் பார்க்க மாட்டேன்.

கௌ: (புன்னகையுடன்) இதற்கும் உன் அம்மா ஏதாவது சொல்லியனுப்பினளா?

ச: ஆமாம் சாமி.

கௌ: என்ன சொன்னள்?

ச: மஹான்களைத் தரிசிக்கும் போது, அவர்கள் முகத்தைப் பார்க்கக் கூடாது. அவர்களுடைய பாதங்களை

மட்டுந்தான் பார்க்க வேண்டும். என்று என் அம்மா சொல்லியனுப்பியிருக்கிருள் சாமி.

கௌ: (புன்னகையுடன்) ஆமாம்! ஆமாம்! சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளேயே! என்கிட்டே வா! (வருகிருன்) இனிமேல் நான் தான் உன் அம்மா! (அப்படியே அவனே வாரி அணைத்துக் கொள்கிருர்.]

— திரை விழுகிறது —

## காட்சி 17

[நிலைமை விளக்கம்: ஆசிரமத்தின் வெளி முற்றம். ஒரு மரத்தின் கிளேயில் ஊஞ்சல் அதில் குருபத்தினி. அவளே ஜாபாலா ஊஞ்சலாட்டிக் கொண்டிருக்கிருள். சுற்றிலும், தரையில் இருந்தபடியும் நின்றபடியும் வேறு சில பெண்களும் உள்ளனர். எல்லாரும் ஆசிரம வாசிகள்]

குரு: அடி ஜாபாலா! உனக்கு என்ன கடுமையான மனம். இல்லா விட்டால், குழந்தை சத்யகாமனே இப்படி விட்டுப் பிரிந்திருப்பாயா? உனக்கு எப்படியடி மனம் வந்தது?

ஜா: அம்மா! அவன் யாரோ நான் யாரோ. எவரோ ஒரு ரிஷிக்குப் பிறந்தவன் அவன். அவனும் ஒரு ரிஷியின் வாழ்க்கையை மேற்கொள்வது தானே சரி. அப்படியிருக்க, இதில் கடுமையான மனம் என்பதற்கு இடமேயில்லேயே!

குரு: உனக்கு அவன் மேல் ஆசையே இல்லே. அன்பே இல்லே. நீ ரொம்பவும் தான் ராட்சசியாகிப் போய் விட்டாய்!

ஜா: ஆசையாய் இருக்கிறது என்பதாலே காய்ச்சல் அடிக்கும் குழந்தைக்கு வாழைப்பழம் கொடுப்போமா? அன்பாக இருக்கிரும் என்பதைக் காட்டக் கணவனேடு பகலில் பலர் முன்னே யாரேனும் கொஞ்சுவார்களா? ஆசைக்கும் அன்புக்கும் அர்த்தமே வேறுதான். ஆசையும் அன்பும் உண்மையானவையாய் இருந்தால், அவை யார் வாழ்வையும் மடக்காது, தடுக்

காது. உண்மையாய்ப் பார்க்கப் போனால், அவை தியாகந்தான் செய்யும்.

குரு : பேசாதடி! தத்துவமா பேசுகிறாய், தத்துவம்? உன் மனத்திலே என்ன தான் இருக்கிறது? கல்லா, மணா? ஒரு மான்குட்டி போல் இந்த ஆசிரமத்தில் அவன துள்ளித் திரிந்து கொண்டிருந்தது என்ன மாய்-கண்ணுக்கு அழகாய் இருந்தது. கொள்ளுக் கொள்ளு என்று பேசும் அந்தக் குழந்தையைக் கடுமையான பிரம்மச்சரிய விரதத்திலே சிக்க வைத்து விட்டாயே! பாவி!

ஜா : தொடங்கும் போது துன்பமாய்த் தொடங்கிப், பிறகு இன்பம் தருவது எதுவோ அது கலவி. "தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்குமாங் கல்வி" என்பது கல்வியைப் பற்றித் திராவிட தேசத்தார் சொல்லும் இலக்கணமாகும். அவன் பிற்காலத்தில் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தான அவனை நான் அனுப்பினேன்.

குரு : இதெல்லாம் யார் ஏற்பாடு?

ஜா : நானே செய்த ஏற்பாடு தானம்மா.

குரு : எப்போது இதை நீ திட்டமிட்டாய்?

ஜா : அவன் என் வயிற்றில் இருக்கும் போதே! ஆனால் விசுவாமித்திர முனிவர் ஆசிரமத்திலிருந்து வந்த இரண்டு முனிவர்கள் இங்கே எழுந்தருளினார்களே! அப்போது தான், இந்தத் திட்டம் செயல்படத் தொடங்கிற்று.

குரு : அவர்களுக்கும் உன் மகன் போவதற்கும் என்ன தொடர்பு?

ஜா : ஹாரித்ருமத கௌதமர் ஆசிரமத்திற்குப் பணிவிடை செய்யப் போகலாமே என்று எனக்குச் சொன்னார்கள்.

குரு : அதற்கு நீ என்ன சொன்னாய்?

ஜா : நான் இங்கேயே சுகமாக இருக்கிறேன். இங்குள்ள குருதேவரும், குரு பத்தினியும், மற்றவர்களும் என் மேல் அன்போடு இருக்கிறார்கள். இதுவரை நான், எங்கெங்கே ஆசிரமங்கள்-தவச் சாலைகள் உண்டோ அங்கெல்லாம் பரிசாரிணியாக வாழ்ந்து விட்டேன். இனிமேல் இதுவே என் கடைசி இடம். இதைவிட்டு

—இந்த ஆசிரமத்தை விட்டு இனி வேறங்கும் செல்வ தாக இல்லை, என்று சொல்லி விட்டேன்.

குரு : அவர்கள் அத்தோடு விட்டார்களா உன்னை?

ஜா : மீண்டும் மீண்டும், நான் ஹாரித்ருமத கௌதமர் ஆசிரமத்திற்கு போனால் நல்லது என்றும், எனக்கு ஞானம் வரும் என்றும் நயமாகப் பலமுறை சொன் னார்கள்.

குரு : அதற்கு?

ஜா : நான் இனி எங்கும் போக முடியாது, எ ் பிள்ளையை வேண்டுமானால் அவரிடம் அனுப்புகிறேன் என்று சொன்னேன்.

குரு : ஏன் அப்படிச் சொன்னாய்?

ஜா : என் மகன் படிக்க வேண்டும் என்பதற்காகச் சொன் னேன்.

குரு : அவன் இங்கேயே படித்திருக்கலாம் இல்லையா? இங்கென்ன குறை அவனுக்கு. நம்முடைய குருதேவர் தான் அவனுக்குப பாடஞ் சொல்ல மாட்டாரா?

ஜா : இல்லையம்மா! இந்த ஆசிரமத்திலேயே அவன் பிறந் தான். பிறந்தது முதல் அவனும் இங்கேயே இருக் கிறான். இங்கேயிருக்கும் ஒவ்வொருவரும் அவனுடன் பிறந்தவர்களைப் போலப் பழகுகிறார்கள். அதனால் அவனுடைய இயற்கையான வளர்ச்சியை நம் முடைய பாசம் தடை செய்து விடும்.

குரு : சரி! அப்படித்தான் அவனை அனுப்பினாயே! நீயும் கூடவே போய் அங்கே அவனைக் கவனித்துக் கொண்டிருக்கலாம் இல்லையா?

ஜா : (கலகல வென்று சிரித்துக் கொண்டே) முன்பு, இங்கே அவன் நம்மோடு இருந்தால் அவன்வளர்ச்சி தடைபடும் என்று சொன்னேனே, அந்தப் பதில் இதற்கும் பொருந்துமே! செல்வன், நம் முகத்திற்கு நேரே இருக்கக் கூடாது அம்மா, அதனால் அவன் ஆன்ம முன்னேற்றம் தடைப்படும். க மையான பிரம்மச்சரிய விரதமும் அனுஷ்டானமும் அவனால் அனுஷ்டிக்க முடியாமல் போய்விடும். அதனால்தான் அவனைத் தன்னந்தனியாகப் பிரித்து அனுப்பினேன். நம் குருவைச் சிரித்துச் சிரித்தே ஏமாற்றி விடுவான்.

நம்மையெல்லாம் ஏமாற்றி விடுவான். அதனுல் இந்தப் பிறவி அவனுக்கு வீணுகி விடும் அம்மா,

குரு : என்ன இருந்தாலும் நீ கொடியவள்! கல் மனம் உனக்கு!

ஜா : செல்வனைப் பார்க்காமல் என் மனமும் சஞ்சலம் அடைகிறது அம்மா.

குரு : அதனுல்தான் அந்தச் சின்னஞ் சிறு புருவை அப் படிப் பிரித்து விட்டாய் போலும்.

ஜா : என்ன செய்வது அம்மா? என் பாசத்தைக் கடிவாளம் போட்டு இழுத்துப் பிடித்துக் கொண்டு அவனை அனுப்பி வைத்தேன்.

குரு : அவனைப் பார்க்காமல் எனக்குப் பைத்தியமே பிடித்து விடும் போல இருக்குது டீ.

ஜா : நான் மட்டும் என்னவாம்? அவன் சீக்கிரம் திரும்பி வர வேண்டும் என்று கடவுளை வேண்டுகின்றேன்.

— திரை விழுகிறது —

## காட்சி 18.

[நிலைமை விளக்கம் : ஹாரித்ருமத கௌதம முனிவரின் ஆசிரமம் பூசையறை. சீடர்கள் மத்தியில் குருதேவர் அமர்ந் திருக்கிருர். அவர் முன்னுல் உட்கார்ந்த நிலையில் பணிந்து வணங்கியபடிச் சத்யகாமன். குருதேவர் பேசுகிருர். அறை யில் ஆழ்ந்த அமைதி]

கௌ: சத்யகாமா! இதோ! உன் தாயின் எண்ணத்தின்படி, நான் கொடுத்த வாக்கின்படி, என் சற்குருவின் திருவருளின்படி இன்று முதல் இப்போது முதல் நீ பிரம்மச்சாரி ஆகி விட்டாய். கடுமையான பிரம்மச் சரிய விரதங்களை மேற்கொள்ளும் வழிகளை நேற்றே உனக்கு நான் சொல்லியிருக்கிறேன். இன்று முதல் உன் பிரம்மச்சரியக் கடமைகளை ஒழுங்காகச் செய்து வருவாய். காலையும் மாலையும் கனலை வணங்கு. கனலே சூரியன். கனலே சந்திரன். கனலே உடுக்கள். கனலே ஞானம். கனலே எல்லாம். கனலே ஒளி. உனக்கு ஞானம் விளைவதாக! ஓம்!

[அனைவரும் ஓம் ஓம் ஓம் என்று மும்முறை முழங்குகிறார்கள்.]

கௌ: (திரும்பிப் பார்த்து) எல்லாம் ஆயத்தமா?

ஒரு : ஆம் சாமி!

கௌ: என்ன செய்திருக்கிறாய்?

சீ : நம்,மாட்டுக் கொட்டிலிலேயிருந்து,நல்ல நோஞ்சான் பசுக்களை, மிகவும் மெலிந்து எலும்புந் தோலுமாக இருக்கின்ற நானூறு சோனிப் பசுக்களைத் தனியாகப் பொறுக்கியெடுத்துப் பிரித்து வைத்திருக்கிறேன் சுவாமி.

கௌ: எல்லாம் ஆயத்தமா?

சீ : ஆம் சாமி!

கௌ: மிகவும் மோசமான வற்றையே நன்றாகக் கவனித்துப் பொறுக்கி யெடுத்தாயா?

சீ : ஆமாம் சுவாமி!

கௌ! இப்போது பால் கொடுக்கும் பசு எதுவும் அதில் இல்லையே?

சீ : இல்லை சுவாமி.

கௌ: சூல் பசு எதுவும் இல்லையே!

சீ : இல்லை சுவாமி!

கௌ: உம் சரி. திருப்தி. (சத்யகாமனை நோக்கி) சத்யகாமா! ஓ! பிரம்மச்சாரி! எழுந்திரு.
(சத்யகாமன் எழுந்து வணங்கி நிற்கிறான்]

கௌ: (மந்தையைக் காட்டி) அதன் பின்னாலே போ.
(சத்யகாமன் தரையில் விழுந்து வணங்கிவிட்டு வெளியே போகிறான்)

— திரை விழுகிறது —

## காட்சி 19

[நிலைமை விளக்கம்: கனாகச் சூழல். மாட்டு மந்தைகள் போகின்றன. அவற்றின் பின்னால் சத்யகாமன் கையிலே ஒரு கோல் கொண்டு நடந்து செல்கிறான். நிற்கிறான். மாடுகள் போய்க் கொண்டேயிருக்கின்றன. தனக்குள் ஏதோ சொல்லிக் கொள்கிறான். அவன் முகத்தில் ஒளி ]

(தனக்குள்) குருதேவர் 'என்னைத் தமது சீடனுக-பிரம்மச்சாரியாக ஏற்றுக்கொண்டு விட்டார். பிரமமச்சரியமும் வழங்கி விடடார். அதுவே என் பர்க்கியம் (எங்கோ பார்த்து) அம்மா! நீ எங்கே இருக்கிருய்? நல்லா இருக்கிருயா? நான் இப்போது பிரமமச்சாரி. நீ சொன்னது - நீ ஆசைப்பட்டது இப்போது எனக்குக் கிடைத்து விட்டது. உனக்கு இதை யார் முலமாகவாவது சொல்லி அனுப்புகிறேன். அதைக் கேட்டதும் உனக்கு எவ்வளவு சந்தோஷ முண்டாகும். உன் கண்ணில் தண்ணீர் வரும். உடனே நீ சிரிப்பாய். அம்மா! யாராவது கண்ணிலே தண்ணீர் வரும்போது சிரிப்பார்களா? அழுவார்கள் தானே! ஆனுல் நீ மட்டும் கண்ணீர் விட்டுக் கொண்டே சிரிக்கிருயே! அது ஏன்? நான் இன்னும் பெரியவன் ஆனதும் உன்னிடம் வந்து கேட்கிறேன். அப்போது நீ பதில் சொல்வாய் அல்லவா? குருநாதரிடம் என்னை அனுப்பிய உனக்கு என் வணக்கம். (தான் வந்த திசையை நோக்கித் திரும்பி நிற்கிருன். கை குவித்து வணங்குகிருன். சொல்கிருன். உரத்த குரலில்)

குருதேவரே! வணக்கம். இதோ இந்த நானூறு நோஞ்சான் பசுக்களும் நன்ருகக் கொழுத்து, ஆயிரம் ஆகும் வரை நான் திரும்ப மாட்டேன். இவை சீக்கிரம் பலுகவேண்டும். இதை அருள் செய்யுங்கள் பிரபு.

[குனிந்து, தரையைத் தொட்டு வணங்கி, அந்தக் கானக மண்ணைத் தன் தலையிலே தூவிக் கொண்டு நெற்றியில் இட்டுக் கொள்கிருன். முகத்திலே மகிழ்ச்சி பொங்க]

குருதேவா! அருள் செய்வீர்! வருகிறேன்.

[திரும்பி நடக்கிருன்]

— திரை விழுகிறது —

## காட்சி 20

[நிலைமை விளக்கம்; ஆசிரமத்தின் வெளிப்புறம். பெரிய மரத்து நிழலில். காலம் நண்பகல். இரண்டு சீடர்கள் நின்று பேசிக் கொண்டிருகிருர்கள்]

சீ. 1: நடந்ததைப் பார்த்தாயா?
2: எதைச் சொல்கிறாய்?
1: காலையில் நடந்ததைத் தான்.
2: அதற்கென்ன இப்போது?
1: ஞானந் தேடி வந்தான். பாவம். மந்தையை ஓட்டிக் கொண்டு போனான். இவன்தான் ஞானம் பெற வந்தவன்.
2: ஞானத்தால் ஆவதென்ன?
1: குருதேவரைப் போல அவனும் பணத்திற்கு யாரை யேனும் எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியது தான்.
2: ஏன் அப்படிச் சொல்கிறாய்?
1: பிறகென்ன? யாகம் செய்வதற்குப் பொன் வேண்டும். அதற்கு யாரிடமாவது போய்த்தானே ஆகவேண்டும்? இல்லாவிட்டால் எவனாவது மன்னன் வருவானா என்று எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்.
2: யாகமே பண்ணாவிட்டால் என்ன?
1: மழை பெய்யாதே! பயிர்கள் விளையாதே! காட்டு மரங்களில் கனிகள் குலுங்காதே! உலக வாழ்க்கை சரியாக முறைப்படி நடக்காதே!
2: நீ நம்புகிறாயா?
1: எதை?
2: யாகம் பண்ணாவிட்டால் மழை பெய்யாது, மரத்தில் கனிகள் வராது என்பதை?
1: ஆம். நம்புகிறேன்.
2: எதை?
1: யாகம் பண்ணினால் மழை வரும் என்பதை. ஆனால் ஞானத்தை நான நம்ப வில்லை.
2: அப்படியானல் அது தேவையற்றது என்கிறாயா?
1: ஞானம் தேவையற்றது என்று நான் சொல்லவில்லை. ஆனால் அந்த நிலை வரும்போது மற்றவர் கையைப் பிச்சைக்காரர்கள் போல் எதிர்பார்க்க வேண்டி வருகிறதே என்று தான் சொல்கிறேன்.
2 குருதேவர் இருப்பதால் தானே நீயும் நானும் இங்கே

வந்தோர் சாஸ்திரம் படிப்பதற்கு? பிறகேன் குறை கூறுகிறாய்?

1: குறை கூறவில்லை நான். ஞானம் பெறுதலும், உலக விவகாரங்களும் ஒன்றை மற்றொன்று எதிரே நின்று தான் பார்க்கும். நாம் தேடிவந்த வில் வித்தை, புரவி வித்தை போர்க்கலை நமக்கு வசமாகும். இது நிச்சயம், ஆனால் இந்தச் சாஸ்திரங்களால் ஞானம வரும் என்று நீ நினைக்கிறாயா?

2: வராது. இதுவும நிச்சயம்.

1: ஆனால் நமக்கு ஆள் பலம், பொன் பலம் முதலியன எல்லாம் உண்டாகும்.

2: அது சரி. நம் குருதேவர் ஞானி. அவர் புகழ் என்றும் நிற்கும். மாட்டு மந்தைக்குப் பின்னால் போன சிறு பயல் சத்யகாமன் ஞானம் பெற்றுவிட்டால் அவனும் ஞானி. அவன் புகழும் வரலாற்றில் நிற்கும். உன்னை யும் என்னையும் யார் நினைக்கப் போகிறார்கள் எதிர் காலத்தில்? நம்முடைய இந்த வித்தை யெல்லாம் நாம் உயிர் வாழ்கின்ற இன்றோடு சரி. ஆனால் சத்ய காமன் பெறப்போவது, என்றும் அழியாத சிரஞ்சீ வித்வம் உள்ள அமிர்த வித்தையல்லவா? ஞான வித்தையல்லவா? நாமெல்லாம் மரணத்தைத் தழுவிக் கொண்டு மறைந்து பல ஆயிரம் ஆண்டுகளானாலும் அவனை உலகம் சதா நினைத்துப் பார்க்குமே! அவன் பெயரை ஞானிகள் எல்லாம் அன்போடு உச்சரிப் பார்களே! உன்னையும் என்னையும் இந்த மாடுகளையும்— மனிதர்களைத்தான் சொல்கிறேன்—எத்தனை நாளைக்கு நினைவில் வைத்திருக்கும் இந்த உலகம்? இன்று, பசு மந்தையின் பின்னாலே சத்யகாமன் போகலாம். ஆனால் அவன் பின்னாலே இந்த உலகம், தான் உள்ளவும் போகுமே. அதிலும் சாதாரண ஞானிகள் அல்லவா போவார்கள்?

1: அதுசரி! இப்போது அதற்கு என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?

2: அவனுக்கு ஞானம் வாய்க்கட்டும் என்று நாம் வேண்டுவோம். அவன் அடையும் அந்த ஞான விளக்கின் ஒளியில் உலகம் நல்வழியில் நடக்கட்டும்

என்று வேண்டுவோம்.

1: உண்மைதான். எதிர்காலத்தில் நம் மகன்களையே கூட ஞானம் பெறுவதற்கு இவனிடம் அனுப்புவோமோ என்னவோ! யார் கண்டது?

— திரை விழுகிறது —

## காட்சி 21

[நிலைமை விளக்கம்: கானகத்தில் வேடுவர் குடிசை. அதன் முன்னால், மரத்தின் கொம்பில் தொங்கும் தூளியில் இருக்கும் குழந்தை ஒன்றைத் தாலாட்டிக் கொண்டிருக்கிறாள். திடீரென்று கூவுகிறாள்]

அவள்: யோவ்! யோவ்! இத பாருய்யா! அந்தக் கொயந்தெ திரும்பிவர்றான்.!
(குடிசைக்குள்ளிருந்து வேடன் வெளியில் ஓடி வருகிறான்)

வே : ஓ! இந்தப் புள்ளெ! வந்துட்டானே!

ம : இன்னாய்யா இது? நம்பளைப் போலப் பசுமந்தையை ஓட்டிக்கினு வர்றான்?

வே : அதா! அது, அந்தக் கெயவரு இந்தப் புள்ளையெ ஏத்துக்கிட்டார்'னு அர்த்தம்.

ம : அது இன்னாயா ஏத்துக்கிட்டாரு?

வே : ஒனக்குச் சொன்னாப் புரியாது.

ம : அட சொல்லுய்யா'ன்னா!

வே : அடீ! அந்தக் கெயவன் எல்லாரையும் ஏத்துக்காது. பொல்லாத கெயவன் அது, நம்ப மனசுக்குள்ளே இன்னா கீது'ன்னு உள்ளே பூந்து பாத்துடும் டீ! லேசுப்பட்ட கெயவன் இல்லே!

ம : (குழப்பத்துடன்) இன்னாய்யா சொல்றே? ரொம்பக் கெட்ட கெயவனா? பாத்தா அப்பிடித் தெரியல்லியே!

வே : அந்தக் கெயவன் கடவுள் மாதிரி. மத்தவங்க மனசிலே இன்னா ஒளிஞ்சிக்கினு இருக்குது'ங்கறது அதுக்குச் சாதாரணமா தெரிஞ்சுடும். உந் தங்கச்சி காரி மேலே எனக்கு ஒரு இது'ன்னு தான் ஒனக்குந் தெரியுமில்லே. அப்போ ஒரு நாள், இந்தக் கெய்வனெப் போய்ப் பாத்தேன். வலையிலே ஒண்ணுஞ்சிக்க

மாட்டேன்னுது. ஏதாவது சொல்லு சாமி'ண்ணேன். அதுக்கு அந்தக் கெயவன் என்னெயெப் பாத்து நமுட்டுச் சிரிப்புச் சிரிச்சிட்டு இன்னு சொல்லிச்சித் தெரியுமா டீ?

ம : இன்னு சொல்லிச்சி?

வே : சொன்னுக் கோவிச்சுக்க மாட்டியே!

ம : எதுக்குக் கோவிச்சுக்கணும்? சொல்லு.

வே : கெயவன் இப்படிச் சொல்லிச்சி: அடேய் பயலே! நீயே ஒருத்தி வலையிலே உய்ந்து கெடக்குறியே! உன் வலையிலே எப்படி மானுங்க உயும்?''—அப்படீன்னு கேட்டுது. அசந்து பூட்டேன்.

ம : (அமைதி)

வே : புரியுதாடீ. முண்டம். உன் தங்கச்சியும் நானும் ஒரு மாதிரியா இருந்ததெக் கெயவன் என்னமா குத்திக் காட்டிச்சி தெரியுமா? முயக்குட்டி ஒடம்புலே கத்தி எப்படி பூருமோ அப்படி, அந்த வார்த்தெ என் மனசுலே பனியாப் பூந்துது. எப்பிடி?

ம : அடப்பாவி! உன்னைப் புதைக்க. உனக்கு என்னு ஒரு தகிரியம் இருந்தா ஏண்ட்டெயே நீ சொல்லுவே!

வே : (பரிதாபமாகக் கெஞ்சும் பாவனையில) கோவிச்சுக் காதே'ன்னு மொதல்லியே சொன்னேனு இல்லையா?

ம : சரிசரி சொல்லு. அப்புறம் என்னு நடத்திச்சி?

வே : அந்த வார்த்தையெக் கேட்டுக்கினு நம்ம வூட்டுக்கு வந்தேன். ரெண்டு நாள் அவளை உட முடியாமெப் போராடினேன். பிறகு அவளெ வெலக்கிட்டேன். அதும் பொறவு என் வலைல மான்பட்டுதுடி. அப்படிப் பட்ட பொல்லாத கெயவன் அது.

ம : சரி சரி! அதக் கெயவன் எல்லாரையும் ஏத்துக் காது'ன்னு சொன்னியே! அதச் சொல்லு.

வே : அந்தக் கெயவன் எல்லார்க்கும் மொதல்லே பரிச்சை வெக்கும். தகுந்த ஆள்தானுன்னு பாக்கும். இஷ்டப் பட்டா ஏத்துக்கும். இல்லேன்னு, வூட்டுக்குப் போய் வாடா'ன்னு அனுப்பிடும். இந்தப் பச்செப்புள்ளையெக் கெயவன் ஏத்துக்கிச்சுடீ. எனக்கு ரொம்பச் சந்தோசமா இருக்குது.

ம : ஆமாய்யா! இன்னுன்னே தெரியல்லே. எனக்குங்

கோட அந்தப் புள்ளெயப் பாத்தா ரொம்ப சந்தோச மா இருக்குதுய்யா!

வே : அடி! எனக்கு ஏந் தெரியுமா சந்தோசம்?

ம : சொல்லுய்யா!

வே : அது ஒரு கதை.

ம : அட சொல்லுய்யா'ன்னு!

வே : சொல்றேன். மொத மொத இந்தப் புள்ளெ போச்சா?

ம : போச்சி.

வே : போயி.

ம : போயி.

வே : போயி இன்னு போயி? அந்தக் கெயவன் கால்லே இந்தப் புள்ளெ உய்ந்து கும்புட்சி. ஒம் பேரு இன்னு? ஒங்காத்தா பேரு இன்னு? அப்பன் பேரு இன்னு? பொன்னு கொணுந்து கீறயா? – ன்னிட்டு கெயவன் கேட்டுச்சாம். அதெ எட்டாாறதுக்கு இந்த புள்ளெ திரும்பி அதும் ஆத்தா கிட்டே போச்சாம்.

ம : இது கூடத் தெரியாமயா அதும் ஆத்தாக்காரி இநதச் சின்னஞ் சிறிசெ அனுப்பி வெச்சா?

வே : அடி முண்டம்! அது இல்லேடி வெசயம். ஆசரமத்து லே சிஷ்யப் பயலுக என்ன பேசிக்கறுங்க தெரியுமா?

ம : சொன்னுத் தானே தெரியும்.

வே : இதோ! இப்பத் தெரிஞ்சுக்க. ஒண்ணுமில்லாத பய அப்பன் பேரு தெரியாத பயு. கொலங் கோத்திரம் ஒண்ணுமிலலாத பய. அபபடின்னு என்ன வெல்லா மோ பேசிககிறுனுங்க.

ம : ஆமாய்யா! இவனுங்கள்ளாம் படிக்க வந்தானுங் களா? இல்லே வம்பளக்க வந்தானுங்களா? அவென எப்பிடிப் பொறந்திருந்தா இவனுங்களுக் கென்ன'ன் னேன். இவனுங்கெள்ளாம் மனுஷ ஜன்மங்களா?

வே : அடி! உனக்கேண்டி இம்மாங் கோவம் வருது.

ம : பின்னே இன்னுய்யா? அவளோட ஆம் படையாங் காரனே கேக்காதப்போ இவனுங்க ஆரு அதைக் கேக்கறதுக்கு'ன்னேன்.

வே : அப்பிடி இல்லேடி! அது வேறே சமாச்சாரம்.

ம : சரி அதை உடுய்யா. ஆத்தாக்காரி கிட்டே அந்தப் புள்ளே திரும்பிப் போனு'ன்னு சொன்னியே அதைச்

சொல்லுய்யா. மத்தவங்க எப்படிப் போனு நம்பனுக்கு இன்னு? இந்தக் கொழந்தை மொகத்துலே பால் வடியுது. இதெப் பெத்த அதும் அம்மாக்காரி ரொம்ப ரொம்பக் கொடுத்து வச்சவ. நீ சொல்லுயா.

வே : இன்னு நடத்திச்சின்னு எனக்குத் தெரியாது. நாளைக்கு ஆசிரமம் போய் வந்து சொல்றேன்.

ம : அந்தக் கொழந்தைக்குச் சாப்புட எதனுச்சும் கொடுப் போம்யா.

வே : சரி சரி. நானு வேண்டாங்கறேன்.

— திரை விழுகிறது —

## காட்சி 22

[நிலைமை விளக்கம்: ஹாரித்ருமத கௌதமர் ஆசிரமம். உள் கூடம். அவர் பாடஞ் சொல்லிக் கொண்டிருக்கின்றார். அவரைச் சுற்றி மாணவர்கள், ஓலைச் சுவடிக் கட்டுக்களைக் கைகளில் ஏந்தியபடி. கௌதமர் மூத்துக் காணப்படுகிறார்.]

கௌ: ஓம்! இப்போது, இத்தனை நாள் நீங்கள் கேட்ட பாடத்திற்குப் பிறகு, இன்றைக்கு ஓர் ஆத்ம சாதகன் அடைய வேண்டிய முடிவான முடிவைப் பற்றிக் கூறப் போகின்றேன். அதுவே கட்டறுத்து வீடு புகுதல் என்பது.

வேதங்கள் கூறும் மோக்ஷம் என்பது வேறு. உப நிடதங்கள் கூறும் ப்ரம்மம் என்பது வேறு. பிரம்மம் என்பது ஓர் ஆத்ம சாதகன் தன்னுடைய கட்டுக்களை யெல்லாம் சோதித்து எறிந்து விட்டுச் சுதந்திரமாய் நிற்கின்ற பெரிய நிலை.

இந்த நம்முடைய உடம்புதான் பரப்பிரம்மத்தின் நகரம். இதிலே ஒரு சிறந்த அழகிய மாளிகை உண்டு. தாமரை மொக்கின் வடிவம் போன்றது அது. அதுவே நமது இருதயம். அதனுல் அதை இதயக் கமலம் என்று பெரியவர்கள் சொல்லு கின்றார்கள். அந்தச் சிறிய தாமரை மொக்கினுள்ளே ஓர் வெட்டவெளி இருக்கின்றது. அந்த வெளிக்குள் ளே என்ன இருக்கிறது என்பதையே ஒருவன்

அறிந்து கண்டுபிடிக்க வேண்டும். உண்மையாகவே அந்த ஒன்றைத்தான் ஒருவன் புரிந்து கொள்ள வேண்டும்.

இதை புரிந்து கொள்ளும் போதுதான் ஆத்ம சாதகன் ஒருவன், எல்லாவற்றையும் விட்டு விடுதலையாகி நிற்கிறான். விட்டு நிற்பதால் இது வீடு என்றுங் கூறப்படும். இதுவே சத் என்றும், ஆத்மா என்றும், பூமன் என்றும், பிரம்மம் என்றும், நான முன்பு குறித்தது என்றும் நீங்கள் அறிய வேண்டும்.

இதைப் அறியக் கூடியவன எவன் என்றால், மிகச் சிறந்த தூயமையும், மிகச் சிறந்த தியான யோகமும் மிகச் சிறந்த கட்டுப்பாடான பிரம்மச்சரியமும் அடையப் பெற்ற உன்னதமான தரத்தை உடையவனே. இவனே அந்த உருவ மற்றதை-அனைத்திற்கும் ஆதாரமானதை-இரண்டில்லாமல் ஒன்றேயான அதை அடையக் கூடியவன் ஆகிறான். அந்த அது, எல்லாப் பொருள்களிலும் ஊடுருவிக் கலந்து இருக்கிறது. எல்லாவற்றையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கிறது. மகா சூட்சுமமானது. எந்தப் பொருளையும் விடப் பெரியது.

உலகிலே உள்ள மனிதர்கள் எல்லாருமே இப்படிச் சூட்சுமமான அறிவு நிறைந்தவர்கள் இல்லை. அறிவு நிலையிலே முன் பின் தாழ்ந்தவர்களும் உள்ளனர். சாஸ்திரங்கள், அவர்களுக்கும் வழி வகைகள் வகுக்க வேண்டும். அவர்களுக்குண்டான வழி வகைகளையும் அவை காட்டிச் செல்கின்றன. தனிமைத் தியானமும், பூஜைகளும் அவர்களுக்காகவே ஏற்படுத்தப் பட்டவை. இவற்றை மனத்தாலே நாம் செய்கிறோம். மனம் நன்கு பக்குவப்பட எல்லாருமே தனிமைத் தியானமும் பூஜைகளும் நாள்தோறும் பழக வேண்டும். இது உடலைத் தன் கட்டுப்பாட்டுக்குள்ளே கொண்டு வரும். ஆத்தும விசாரத்தின் இந்த விஷயங்களை நான் இன்னொரு நாள் விளக்குவேன். இதுவரை சொன்னதிலே உங்களுக்குப் புரியாதது ஏதாவது இருந்தால் கேளுங்கள்.

சீ. 1: ஆன்மா என்பதும் பிரம்மம் என்பதும் ஒன்று என்று சொன்னீர்கள் சாமி.

குரு : ஆமாம்!

சீ. 1: பிரம்மமே வெட்டவெளி என்றும் சொன்னீர்கள் சுவாமி.

குரு : ஆமாம்.

சீ. 1: அந்த வெட்டவெளி இதய கமலத்திற்குள்ளும் இருப்பதாகச் சொன்னீர்கள் சாமி.

குரு : ஆமாம்!

சீ. 1: அந்த இருதயக் கமலத்தில் அந்த வெட்டவெளியை எப்படித் தேடுவது? அதைத்தான் ஒருவன் ஆராய்ந்தறிய வேண்டும் என்றும் சொன்னீர்கள். அது எப்படிச் சாத்தியமாகும்?

குரு : வெட்டவெளியை எப்படி ஒருவன் தேட முடியும்?

சீ. 1: ஒரு பெரிய காடு. அதிலே ஒரு குறிப்பிட்ட ஒரு மரத்தை நான் அடைய வேண்டும். அதற்கு வழியைக் கேட்கிறேன். வேடன் என்னிடம், இந்தக் காறு அந்த மரத்துக்குப் பக்கமாகத்தான் போகிறது. இங்கிருந்து இதன் வலது கரையோரமாக மூன்று நாள் நட. அங்கே ஒரு குன்று உனக்கு வலது பக்கம் தெரியும். இந்தக் குன்று, நீ கரையோரமாக நடந்து கொண்டே வரும்போது இரண்டு பெரிய ஆல மரங்களுக்கு இடையிலே மிகத் தொலைவிலே தெரிகின்றதைக் காண்பாய். அப்படிக் கண்டவுடனே நின்று விடு. எதிரே கூர்ந்து பார். ஆளுயரப் பாம்புப் புற்றுக்களைக் காண்பாய், அதைக் கடந்து ஒரு பள்ளத்தாக்கு வரும். அதிலே நீ சொன்ன மரம் நிற்கக் காணலாம் என்று கூறுகிறான்.

குரு : அது போல?

சீ. 1: அதுபோல அந்தப் பிரம்மம்–ஆகாயம்–வெட்டவெளி –ஆன்மா என்பதை இதயக் கமலத்திலே எங்கேயென்று தேடுவது?

குரு : எந்த அடையாளமும் அங்கே இல்லை. எந்த ஒன்றையும் காட்டி அதற்குப் பக்கத்திலே இது இருக்கிறது என்றும் சொல்ல முடியாது. அதைத் தாங்கிக் கொண்டும் எதுவும் இல்லை. அதாவது ஒரு மலரைக்

காட்டினுல், அதைச் சிறு கொம்பும், அதை ஒரு மரமும், அந்த மரத்தை நிலமும் தாங்கிக் கொண்டு இருப்பதைக் காண்போம். அவ்வாறு இதைத் தாங்கிக் கொண்டு எதுவும் இல்லை. சார்போ, துணையோ ஏதும் அற்றது அது. அதற்குத் துணை அதுவே. தன்னிலே தானுக நிற்பது அது வானத்தை நிமிர்ந்து பாருங்கள். (அனைவரும் நிமிர்கின்றார்கள்)

இந்தச் சூரியன், இந்த நிலா, இந்த நட்சத்திரங்கள் எல்லாம் இந்த ஆகாயப் பெரு வெளியில் நிற்கின்றன ஆனுல் அந்த ஆகாயத்தை எது தாங்கிக் கொண்டிருக்கிறது? மலைகளா? தூண்களா? இல்லை. எதுவும் இல்லை இது போலத்தான் இருதயக் கமலத்தில் உள்ளதான வெட்ட வெளியும் எந்தச் சார்பும் இல்லாமல், எந்தப் பற்றும் இல்லாமல்தான் மட்டுமே இருக்கிறது. தனித்து இருக்கிறது. சார்பின்றி நிற்கிறது, மேலே நாம் காணும் ஆகாயப் பெரு வெளியும், இதயக்கமலத்திலே காணும் வெட்டவெளியும் ஒன்றேயாக இருப்பதால்தான இரண்டிற்கும் ஆகாயம்—வெட்டவெளி என்று பெயர்.

சீ. 2: அங்கே வேறேதாவது இருக்கிறதா சாமி?

குரு : இல்லை ஒன்றும் இல்லை ஒன்றுமே இல்லை. அதனுல் தான் அதைப் பாழ்வெளி என்று நூல்கள் விவரிக்கின்றன. சூன்யம் என்பதும் அதுவே,

சீ. 3: இந்தச் சூன்யத்தை எப்படி வணங்குவது சுவாமி?

குரு : உன் கேள்வியை இன்னும் தெளிவாகக் கேள்.

சீ. 3: உருவமில்லாதது சூன்யம்.

குரு : ஆமாம்!

சீ. 3: எந்தச் சார்பும் இல்லாதது சூன்யம்.

குரு : ஆமாம்!

சீ. 3: அத்தகைய ஒன்றை எப்படிப் பற்றுவது?

குரு : பிரம்மம் என்பதும் ஆன்மா என்பதும் ஒன்றே!

சீ. 3: ஆமாம்!

குரு : ஆன்மா என்பதும் இதயக் கமலத்தின் வெட்ட வெளியும் ஒன்றே!

சீ. 3: ஆமாம்.

குரு : இதயக் கமலத்தில் வெட்டவெளி இருப்பதால்

இதயமே வெட்டவெளி என்று பெயர் பெறுகிறது.

சீ. 3: ஆமாம்!

குரு: மேலே நீ பார்த்த ஆகாய வெட்ட வெளியும் இதயக் கமல வெட்ட வெளியும் குணத்தில் ஒன்றே!

சீ. 3: ஆமாம்!

குரு: அந்த வெளியும் இந்த வெளியும் ஒன்றே!

சீ. 3: ஆமாம்!

குரு: இந்த வெட்ட வெளியை இடமாக மேம் போக்காக உடையது இதயக்கமலம்.

சீ. 3: ஆமாம்!

குரு: எனவே பிரம்மம் என்பது இதயக்கமலத்தில் ஆன்மா என்ற பேரோடு விளங்குகிறது.

சீ. 3: ஆமாம்!

குரு: அந்த ஆன்மாவைத் தரிசிக்க இதயக்கமலமே இட மாகிறது.

சீ. 3: ஆமாம்!

குரு: எனவே பிரம்மம் எ பதை விசிஷ்டமான பாவனை யில் இதயக்கமலத்திலே தரிசிக்கலாம்.

சீ. 3: ஆமாம்!

குரு: எனவே இதயக்கமலத்தில் பரம் பொருள்-பிரம்மம் இருக்கிறது என்ற மஹா பாவனையால் வணங்கினால் பிரம்மத்தைத் தரிசிக்கலாம் என்பது முடிவாகிறது.

சீ. 3: ஆமாம்!

குரு: இதுதான் மகனே! உன் கேள்விக்கு விடை. புரிந்ததா?

சீ. 3: புரிந்தது சாமி!

சீ. 4: சுவாமி!

குரு: சொல்லு

சீ. 4: இதயத்திலே பிரம்மம் நிற்கிறது என்று சொன்னீர்கள்

குரு: ஆமாம்.

சீ. 4: ஒரு சிறு கட்டை விரல் கூட உள்ளே நுழைய முடி யாத இருதயத்திலே உள்ள பிரம்மமா இவ்வளவு பெரிய மலையையும் மனிதனையும் மற்றும் உள்ள யானை முதலான மிருகங்களையும் படைத்தது?

குரு: இதயக்கமலத்தில் பிரம்மம் விளங்குகிறது என்று சொன்னோம்.

சீ. 4: ஆமாம்.

குரு : அது நிர்க்குணப் பிரம்மம் என்றும், சகுணப் பிரம்மம் என்றும், இருவகைப் பட்ட நிலையில் விளங்குகிறது என்றும், முன்னொரு நாள் நாம் பேசினோம்.

சீ. 4: ஆமாம்!

குரு : உபாசனை காலத்தில் சகுணமாய் விளங்கும் அதுவே சாட்சாதகாரத்தில் நிர்க்குணமாய் நிற்கிறது என்றும் அன்று கண்டோம்.

சீ. 4: ஆமாம்!

குரு : அவ்வாறே அது இதயக்கமலத்தில் நிற்கும்போது ஜீவாத்மா என்று உணரப்படுகிறது என்றும, அந்த நிலையில் இந்த உலகத்தைப் பெயர்கள் உள்ளதாக வும், வடிவங்கள் உள்ளதாகவும் காட்டுகிறது என்றும், அன்று கண்டோம்.

சீ. 4: ஆமாம்!

குரு : ஓர் ஆலம் பழத்தைக் கொண்டுவா. (பேசாய் எடுத்து வருகிறான்) இது என்ன?

சீ. 4: ஆலம்பழம்.

குரு : மேலே தோல் உள்ளது.

சீ. 4: ஆமாம்!

குரு : இதை இரண்டாக வெட்டு.

சீ. 4: வெட்டி விட்டேன். (வெட்டுகிறான்)

குரு : என்ன பார்க்கிறாய்?

சீ. 4: விதைகள்.

குரு : ஒரு விதையைத் தனியாக எடு.

சீ. 4: எடுத்து விட்டேன்.

குரு : அதை வெட்டு.

சீ. 4: வெட்டி விட்டேன்.

குரு : என்ன பார்க்கிறாய்?

சீ. 4: ஒன்றுமில்லை.

குரு : விதைக்குள்ளே என்ன இருந்தது?

சீ. 4: ரசம்.

குரு : இப்போது இருக்கிறதா?

சீ. 4: இல்லை.

குரு : ஏன் இல்லை?

சீ. 4: ஆவியாகி விட்டது.

குரு : ஆலமரம் எதிலேயிருந்து வருகிறது?
சீ. 4: ஆலம் பழத்திலிருந்து.
குரு : ஆலம் பழத்திலிருந்தா ? சரியாகச் சொல்.
சீ. 4: விதையிலிருந்து.
குரு : விதை எவ்வளவு பெரியது?
சீ. 4: கிட்டே பார்த்தால் மட்டுமே தெரியக் கூடிய அளவு.
குரு : அதாவது கடுகளவை விடச் சிறியது.
சீ. 4: ஆமாம் !
குரு : அதற்குள்ளே என்ன இருந்தது?
சீ. 4: ஒன்றுமில்லை.
குரு : ஒன்றுமில்லாததிலிருந்தா அவ்வளவு பெரிய ஆலமரம் வருகிறது?
சீ. 4: (அமைதி)
குரு : ஒன்றுமில்லை என்று நீ சொன்னது ரசம் இல்லையா?
சீ. 4: ஆம்.
குரு : பிற்காலத்தில் அவ்வளவு பெரியதாக வளரப் போகும் ஒரு பெரிய ஆல மரத்தின் விசாலமான அடிமரமும், பெரும் பெருங்கிளைகளும், அந்தக் கிளைகளிலே உள்ள சின்னக் கிளைகளும், அவற்றிலே உள்ள ஆயிரக்கணக்கான வண்டிகளிலே ஏற்றக் கூடிய அளவுள்ள இலைகளும் பழங்களும், ஒவ்வோர் பழத்திலும் உள்ள ஆயிரக்கணக்கான விதைகளும் ஆகிய இவையெல்லாம் இந்த ஒரே ஒரு சிறிய பழத்தில் உள்ள ஒரே ஒரு சிறிய விதையிலிருந்து தானே உண்டாகின்றன?
சீ. 4: ஆமாம் !
குரு : அந்த விதையிலேயும் கடைசியில் கண்ணுக்குத் தெரிந்த எதுவும் இல்லையே !
சீ. 4: இல்லை.
குரு : இரசம் மட்டும் தானே எஞ்சி நிற்கிறது?
சீ. 4: ஆமாம் !
குரு : அப்படியானால், அந்த ரசத்திலிருந்து தானே அவ்வளவு பெரிய ஆலமரம் தோன்றுகிறது !
சீ. 4: ஆமாம் !

குரு : அணிதேர்ப்புரவி ஆட்பெரும் படையோடு மன்னர்க் கிருக்க நிழலாகும் அவ்வளவு பெரிய ஆலமரம், இந்தக் கண்ணுக்குத் தெரியாத சின்னஞ்சிறு விதையின் இரசத்திலிருந்து உண்டானது என்று நான் முதலில் சொல்லியிருந்தால் நீ நம்பியிருப்பாயா?

சீ. 4: மாட்டேன்.

குரு : ஆனால் இப்போது நீயே பார்த்ததால் நம்புகிறாய் !

சீ. 4: ஆமாம் !

குரு : இவ்வாறே இந்த ஜீவாத்மாவும் அந்தப் பெரிய ஆல மரம் போன்ற பரமாத்மாவின் இரசம் ஆகின்றது. இதயக் கமலத்திலே-ஒரு கட்டை விரல் பருமன் உள்ளதாக நின்று, மிகச் சிறியதாகவும், அளவு (எல்லை)உள்ளதாகவும் அது தன்னைக் காட்டிக் கொண்டாலும், தன் சொந்த இயற்கையில் அது அளவற்றதாகவும் என்றும் அழியாத தன்மையுள்ள-தாகவும் எப்போதும் விளங்கி நிற்கிறது. எனவே இதயக் கமலத்தின் கண்ணுக்குப் புலனாகும் அளவை வைத்துக் கொண்டு, பரப்பிரம்ம சொரூபத்தை அளவிட நினைப்பது அபத்தம். ஆலம்பழ விதையின் இரசத்தைப்பார்த்துவிட்டு ஆலமரமும் இவ்வளவுதான் என்று நினைப்பதைப் போன்றது அது. சரிதானா?

சீ. 4: (சரி என்னும் பாவனையில் தலையசைக்கிறான்)

குரு : புரிந்ததா மகனே !

சீ. 4: புரிந்தது சாமி.

குரு : எனவே பிரம்மத்தை நம் இதயக் கமலத்திலேயே, மனத்தால் வணங்க வேண்டும். வணங்கினால், அது தன்னை நமக்குக் காட்டும். அதற்குப் பிரம்மச்சரியம் முக்கியமான கருவி. இன்று இது போதும்.

—திரை விழுகிறது—

## காட்சி : 23

[காட்டின் சூழ்நிலையில், நெருப்புக்கு எதிரே, கண்களைத் திறந்தபடிப் பத்மாசனமிட்டு, சத்யகாம ஜாபாலன் உட்கார்ந்திருக்கிருன். அவன் குரல் ஒலிக்கிறது.)

சத் : ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்

—திரை விழுகிறது—

## காட்சி : 24

[நிலைமை விளக்கம் : வேடர் குடிசை. மரத்தின் கிளையில் தொங்கும் தூளி. அதில் அழுங் குழந்தையொன்று. அதை ஒரு சிறிய பையன் ஆட்டித் தூங்க வைக்க முயல்கிருன். வேடன் வில்லுடன் வெளியே எங்கோ புறப்பட்டுப் போகிருன். வேடன் மனைவி தூளியை ஆட்ட முனைகிருள். சிறிய பையன் தகராறு பண்ணவே அவனை முதுகில் நாலுஅறை வைக்கிருள். இந்தக் களேபரத்தில் குழந்தை தூங்குகிறது. காமிராவின் கோணம் சிறிய பையன் மேலும், தூளியின் மேலும், வேடன் மனைவி மேலும் திரும்பத் திரும்பச் சுழல்கிறது.]

—திரை விழுகிறது—

## காட்சி : 25

[நிலைமை விளக்கம் : ஜாபாலா, குருபத்தினி, குரு எல்லாரும் பேசிக் கொண்டிருக்கிருர்கள். ஆசிரம முற்றம். குரு, கட்டிலில் படுத்திருக்கிருர். மூவரும் முன்னைவிட மூத்துக் காணப்படுகிருர்கள்].

குருபத் : என்ன இருந்தாலும் நீங்கள் சீடர்களையெல்லாம் இனிமேல் கல்வி பயில வரவேண்டாம் என்று சொல்லியிருக்கக் கூடாது.

குரு : சபலா! என் வலது கரம் போன்ற மாண்டவ்ய முனிவன் போனபின், எனக்கேன் இந்த வாழ்வெல்லாம்?

ஜா : சாமி ! அவர் விதி அது. அதற்காக நம்முடைய வாழ்வுக் கடமைகளை நாமேன் நிறுத்த வேண்டும்?

குரு : ஜாபாலா! மாண்டவ்யன் ஒரு வீரனைப் போல் அந்தப் புலியுடன் எவ்வளவு தீரமாகச் சண்டையிட்டான் தெரியுமா? அந்த வீரம்! அப்பப்பா ! அற்புதம் ! கையிலே ஆயுதம் ஏதும் இருந்திருந்தால் அது அவனைக் கொன்றிருக்க முடியாது. ஆயுதம் இல்லாததால் அவனை மார்பில் அறைந்து விட்டுக் கழுத்தைக் கடித்துத் தூக்கித் தன் தோள் மேலே ஒரு சிறு குழந்தையைத் தூக்கிப் போடுவது போலப் போட்டுக் கொண்டு காட்டுக்குள் ஓடி மறைந்து விட்டது.

ஜா : நீங்கள் ஒன்றும் செய்யவில்லையா?

கு : எல்லாம் ஒரு கணத்தில் மின்வெட்டுப் போல் நடந்து முடிந்து விட்டது ஜாபாலா.

ஜா : புலி மனிதர்களைத் தாக்குமா?

கு : அபூர்வமாக எப்போதாவது தாக்குவது உண்டு. அதிலும் அது மனித ரத்தத்தை ருசி பார்த்தால் தான் அப்படி. இது மிக நன்ருக வளர்ந்த வாலிபப் புலி. எங்கோ மனித வேட்டையாடிப் பழக்கப்பட்டிருக்கிறது. இதை ஆட்கொல்லி என்றழைப்பார்கள்.

குருபத் : இனி நாம் என்ன செய்யப் போகிறேம்?

கு : கங்கைக்குத் தீர்த்த யாத்திரை போகிறேம்.

குருபத் : நாம் போன பிறகு சத்யகாமன் வந்தால்?

கு : அவன் வர இன்னும் நாள் செல்லும். நாம் போவதைக் கௌதமர் ஆசிரமத்திலும் யார் மூலமாவது சொல்லி விடுவோம்.

ஜா : நானும் வரவேண்டுமா சுவாமி !

குருபத் : இது என்ன பேச்சு ஜாபாலா? நீ இல்லாமல் நான் எப்படிப் போவேன்?

ஜா : நானும் வரவேண்டுமா சுவாமி?

குருபத் : நீ வரவில்லையென்றால், நாங்கள் போய்த் திரும்பும் வரை நீ எங்கேயிருப்பாய்?

குரு : உனக்கு விருப்பமில்லையா ஜாபாலா?

ஜா : ஞானிகளின் பாதங்களை விடவும் அதிகமான தீர்த்த பலம் கங்கைக்கு இருப்பதாக நான் நம்பவில்லை சாமி.

குருபத் : இது என்ன பேச்சு ஜாபாலா?

குரு : சபலா. சும்மா இரு. ஜாபாலா !

ஜா : சுவாமி.

குரு : சத்ய காமன் திரும்பி வர இன்னும் மூன்று ஆண்டுகள் ஆகும். அது வரை நீ யாருடைய ஆசிரமத்தில் தங்கியிருக்க விரும்புகிறாய்? சொல்லு. ஏற்பாடு செய்கிறேன்.

ஜா : இன்னும் மூன்றாண்டுகளா சாமி ?

குரு : ஆமாம் !

ஜா : அப்படியானால் நான் உங்களுடனேயே வந்து விடுகிறேன் சாமி !

குருபத் : (மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்து) அப்படிச் சொல்லடி ஜாபாலா ! இப்போது தான் நீ என் ஜாபாலா. (கட்டி அணைத்துக் கொள்கிறாள்)

குரு : கௌதமரும் இப்போது மிகவும் மூத்துக் காணப் படுகிறார் ஜாபாலா.

ஜா : அப்படியா சுவாமி.

குரு : சென்ற பௌர்ணமியன்று பார்த்தேன். சரிசரி. நாம் தீர்த்த யாத்திரைக்கு வேண்டிய ஏற்பாடு-களைச் செய்வோமா?

—திரை விழுகிறது—

## காட்சி : 26

[நிலைமை விளக்கம் : காட்டில் ஒரு மரத்தடி. சுற்றிலும் பசுக்களும் காளைகளும். அந்திமாலை. தானே மூட்டிய நெருப்புக்கு எதிரே பத்மாசனமிட்டுக் கண்களைத் திறந்தபடியே அக்கினியையே நோக்கியபடி முணுமுணுத்துக் கொண்டிருக்கிறன் சத்யகாமன்.]

ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் !

[திரையில், ஒரு புள்ளியைப் போல் தொடங்கி ஒளி வர வரப் பெரிதாகித் திரை முழுவதும் பரவுகிறது. ஓங்கார ஒலி பெரிதாகிக் கொண்டே வருகிறது.]

—திரை விழுகிறது—

## காட்சி : 27

[நிலைமை விளக்கம் : கானகக் குடிசை. மரத்திலிருந்து தொங்கும் தூளியை ஆட்டிக் கொண்டிருக்கிறள் வேடன் மனைவி. அவள் இடுப்பில் ஒரு கைக் குழந்தை. ஒரு பையன் தரையில் விளையாடிக் கொண்டிருக்கிறன். குழந்தை கத்திக் கொண்டிருக்கிறது. குழந்தையின் அழுகைச் சத்தம் பெரிதாகிக் கொண்டே வருகிறது. காமிராவின் கோணம் பையன் மேல், இடுப்புக் குழந்தை மேல், தூளியின் மேல் விழுகிறது.]

—திரை விழுகிறது—

## காட்சி : 28

[நிலைமை விளக்கம் : காட்டு வழியில் இரண்டு துறவிகள் பேசிக் கொண்டே வருகிறுர்கள்.]

து. 1. என்னதான் இருந்தாலும் அடிகளே! இந்தத்

தாய்மார்கள் இல்லையென்றால் நம் பாரதப் புண்ணிய பூமிக்கு எந்த மகிமையும் இருக்க முடியாது தான்.

து. 2. உண்மை தான்.

1. நானும் எனக்குத் தெரிந்து, நான்கைந்து மாமாங்கம் குமரித் தீர்த்தமாடி வருகிறேன். குறைந்தது இருபது முறைக்கும் மேலாகக் கங்கையிலிருந்து புறப்பட்டுக் கேதாரம் போய், மீண்டும் கங்கைவந்து, அங்கிருந்து கன்னியாகுமாரி போய் மீண்டும் கங்கை வந்து மறுபடியும் கேதாரம் போய்-என்று என் வாழ் நாளெல்லாம் இந்தப் பாரதப் புண்ணிய பூமியை வலம் வந்து கொண்டிருக்கிறேன். எங்கும் இந்தத் தாய்மார்களின் அன்பும் பண்பும் உபசரிப்பும் தான் என் மனத்திலே நிற்கிறது.

2. இந்தப் பாரம்பரியமே ஞானப் பாரம்பரியம் என்பதைத் தான் இது உணர்த்துகின்றது. அதிலேயும் பக்திக்கும் ஞானத்திற்கும் தகுந்த பூமியுண்டென்றால் அது திராவிட பூமிதான்.

1. ஆஹா! உண்மை உண்மை! நன்று சொன்னீர்கள்! உடல் சுத்தியும் மனோசுத்தியும், என்றும் எங்கும் எப்போதும் ததும்பும் பூமி திராவிட பூமியே!

2. அடிகளே! அதிலே பாருங்கள் ஒரு விசேஷம். மனிதனை எப்போதுமே சுறுசுறுப்பாய் வைத்திருக்கும் சீதோஷ்ண நிலை தெற்குத் திராவிடத்திலே தான் மிகவும் சிறப்பாய் அமைந்திருக்கிறது.

1. அதிலும் அந்தப் பஞ்சத் திராவிடிகள் சரியான எமன்கள். தத்துவத்திலே அவர்களைத் தோற்கடிக்க முடியாது.

2. நானும் அவர்களோடு பேசியிருக்கிறேன். மிகத் தெளிவான ஞானிகள். மிக எளிய மனிதர்கள். சேர சோழ பாண்டிய நாடுகளோடு கொங்கண நாடும், அருவா நாடும் சேர்ந்தது தானே பஞ்சத் திராவிடம்!

1. ஆமாம்! இவர்களிலே கொங்கண நாட்டார் அதர்வண வித்தையிலே தேர்ந்தவர்கள்.

2. ஏன் அப்படி?
1. அதர்வாங்கீரசர்கள் தாயகமே அந்த மேற்குத் கரை தானே!
2. அவர்கள் எல்லாருமே திராவிடர்கள் தானே?
1. அதிலென்ன சந்தேகம்!
2. எல்லாருமே திராவிட ஞானிகளாயிருக்க, அவர்களில் ஒரு சாரார் மட்டும் மாந்திரீகம் போற்றுவானேன்!
1. அவர்கள் அதிகமாக மாந்திரீகத்தைக் கையாள்கின்ருர்கள் என்று தான் அடியேன் கூறினேன்.
2. கௌதம முனிவரும் இப்படிச் சொல்லக் கேட்டிருக்கிறேன்.
1. எந்தக் கௌதமர்?
2. ஹாரித்ருமத கௌதமர்.
1. ஓ! அவரா? அவரை நீங்கள் அறிவீர்களா?
2. நான் அவருடைய சீடன் தான்.
1. மிகவும் மகிழ்ச்சி அடிகளே! நானும் அவர் ஆசிரமத்தில் ஒருமுறை தங்கி இருக்கிறேன். அவர் நலமாக இருக்கின்ருரா?
2. இருக்கின்ருர். ஆனுல் இப்போது மிகவும் மூப்பில் இருக்கிருர். ஓராண்டுக்கு முன்னேயிருக்கும் நான் அவரைக் கண்டது. இப்போது எப்படியிருக்கின்ருரோ!
1. தாங்கள் போய் அவருக்குத் துணை இருக்க இன்னும் ஆணையில்லையா?
2. இல்லே. ஆனுல் எவருடைய வரவையோ அவர் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர் என்று மட்டும் புரிந்தது. அன்னுர் வந்ததும் தமது வாழ்வுக் கடமையிலிருந்து ஒதுங்கி விடுவார் என்பதும் புரிந்தது. (நடக்கிருர்கள்)

—திரை விழுகிறது—

## காட்சி : 29

[கானகத்தில் ஒரு மரத்தடியில் நெருப்பு மூட்டுகிறான் சத்திபகாமன். அதன்முன் பத்மாசனமிட்டுக் கண்களை மூடுகிறான். நெருப்பு, முத்துப்போல் சுடர் விட்டு எரிகின்றது. அவன் வாயிலிருந்து ஒலி]

சத் : ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் !

—திரை விழுகிறது—

## காட்சி : 30

[நிலைமை விளக்கம் : மதங்க முனிவர் ஆசிரமம். வெளி முற்றம். சீடர்களும் பிறரும் தத்தம் வேலையில் மூழ்கியிருக்கின்றனர். ஆசிரமத்திற்கு அரசப் பரிவாரம் ஒன்று வருகிறது. சீடர்கள் எல்லாரும் எழுந்து கொள்கிறார்கள். வந்தவர்களுக்கு மரியாதை செய்கிறார்கள். மதங்க முனிவருக்கு வணக்கம் சொல்லி விட்டு அரசர் அமர்கிறார். மந்திரி பிரதானிகள் அமர்கிறார்கள். அந்தப் பக்கமாக ஜாபாலா கையில் தட்டொன்றை ஏந்திக் கொண்டு போகிறாள். அவளை அரசர் பார்க்கிறார். அவள் போன பின்]

அரசர் : (மதங்க முனிவரிடம்) சுவாமி ! இப்போது இப்படிப் போனவர்கள் ஜாபாலா தானே !

முனி : ஆம் அரசே ! அவளை நீர் அறிவீரா?

அ : அறிவேன் சாமி ! தற்போது இங்கு தான் இருப்பா?

முனி : ஆம் அரசே ! இதற்கு முன் வைதோக மன்னர் ஆசிரமத்தில் இருந்தாள்.

அ : பிறகு?

முனி : வைதோகரின் வலது கரம் போல் விளங்கிய மாண்டவ்யரைப் புலி கொன்று விட்டது.

அ : அடாடா ! எப்படி ?

முனி : இவரும் அவரும் விதேக மன்னரிடம் போய்விட்டு வரும் வழியில் காட்டில் மிகவும் வீரமாகப் புலியுடன், கையில் ஆயுதம் ஏதும் இல்லாமலேயே சண்டையிட்டாராம்-மாண்டவ்யர். ஆனால் புலி அவரை நெஞ்சில் அறைந்து கொன்று 'விட்டு ஊட்டியைக் கடித்துத் தூக்கிக் கொண்டு காட்டில் ஓடி மறைந்து விட்டதாம். அது முதல் அவருக்கு வாழ்வே வெறுத்து விட்டது. ஆசிரமத்தைக் கலைத்து விட்டார். கங்கைக்குத் தமது மனைவியுடன் தீர்த்த யாத்திரை கிளம்பினர். கூடவே ஜாபாலா வும் வந்திருக்கிருள். தீர்த்தமாடும் போது வைதோகரின்மனைவி சபலாவை, முதலை இழுத்துக் கொண்டது கங்கை நீருக்குள். அவளைக் காப்பாற்றத் தண்ணீருக்குள் பாய்ந்த இவரைக் கங்கையின் சுழல் இழுத்துக் கொண்டது.

அ : அடாடா ! ஜாபாலா என்ன செய்தாள்?

மு : இவ்வாறவைபும் பார்த்துக் கொண்டு, சிலைபோல் நின்று விட்ட ஜாபாலாவை, அங்கு இருந்தவர்கள் தேற்றியிருக்கிருர்கள். தற்செயலாக அந்தப் பக்கம் போன நான், என் சீடர்களை அனுப்பி அவளை எங்களுடனேயே அழைத்து வந்து விட்டேன். அது முதல் இங்கு தான் இருக்கிருள்.

அ : பாவம் குருநாதர் !

மு : அரசே ! யாரைச் சொல்கிறீர்கள்?

அ : சுவாமி ! நான் வைதோகரின் சீடன்தான். அவர் ஆசிரமத்திலே பன்னிரண்டு ஆண்டுகளுக்கும் மேலாகக் குருகுலவாசம் பண்ணினவன். அவரே என் குருநாதர் ! அவர் மனைவி ஓர் உத்தமத் தாய்! அவர்களின் மகன் விந்தமலை நாட்டுக்குத் தலைவன், அரசன். இந்த ஜாபாலா, என் குருநாதரின் ஆசிரமத்தில் ஒரு பரிசாரிணி. அற்புதமான அறிவும் கல்வியும் ஞானமும் வாய்ந்தவள். தமது

மகனுக்குப் பட்டங் கட்டிவிட்டுத் துறவு பூண்டு மனைவியுடன் காட்டுக்கு வந்தவர்-எங்கள் குருதேவர். காட்டில் துறவியாக வாழ்ந்தாலுங் கூட ஒரு போர்த் துறவியாகத் தான் வாழ்ந்தார் அவர். தாய்மொழிப் பற்றில் இணையில்லாதவர் அவர். அவ்வளவு அன்பு அவருக்கு அவருடைய தாய்மொழியின் மேலே. ஒருவன் ஒரு மொழியைச் செம்மையாகப் படித்தால், அதுவே சரியான வளமான சிந்தனையை ஒருவன் உள்ளத்திலே உண்டாக்கி விடும் என்பார் அவர். எங்களுக்குப் போர்க்கலைகளைக் கற்றுக் கொடுக்கும் போது அவரேயோர் இளைஞராக மாறி விடுவார். அவர் இருக்கும் போதே மாண்டவ்பரைப் புலி தூக்கிக் கொண்டு போனது என்றால், அதை என்னால் நம்ப முடியவில்லை.

மு : அது ஆட்கொல்லி என்று சொன்னாராம் அவர் ஜாபாலாவிடம்.

அ : ஆஹா! அது தானே பார்த்தேன்! சுவாமி! ஜாபாலாவுடன் நான் பேச முடியுமா?

மு : ஆஹா! இதோ வரச் சொல்லுகிறேன். (பக்கவாட்டில் திரும்பி) மதூ.

மது . ஐயா வந்தேன்! (வருகிறான்)

மு : நான் வரச் சொன்னேன் என்று ஜாபாலாவை அழைத்து வா.

மது : அப்படியே சாமி! (போகிறான்)

மு : அரசே! வைதேகர்தான் அரசர் என்றீர்கள். அந்த மாண்டவ்யர் யார்?

அ : குருதேவரின் மைத்துனர். சொந்தத் தங்கையின் கணவர். மனைவியை இழந்தவர்.

(ஜாபாலா வருகிறாள்)

ஜா : சுவாமி அழைத்தீர்களாமே!

மு : (புன்முறுவலுடன்) ஆமாம் ஜாபாலா! இவரைத் தெரிகிறதா பார்!

ஜா : (அரசரைக் கூர்ந்து கவனித்து விட்டுப் புன்னகையுடன்) மன்னருக்கு வணக்கம்.

அ : (மிகுந்த மகிழ்ச்சியுடன்) அக்கா! ஜாபாலா! இந்த மன்னனைத் தெரிகிறதா?

ஜா : ஏன் தெரியவில்லை? வைதோக முனிவரின் சீடர். மத்திம நாட்டு அரசிளங்குமாரர்.

அ : இந்த மன்னனுக்குப் பெயரே கிடையாதா?

ஜா : ஏன் இல்லை? மன்னரே! உமது திருமுடியில் மணிமுடி இருக்கிறது. கோலம் அரசக் கோலம். கூட இருப்பதோ அரசப் பரிவாரம். நானோர் பணிப் பெண். பலர் முன்னிலையில் நாம் இருக்கிறோம். அவரவர்கள் தகுதியை அவரவர்கள் கவனிக்க வேண்டும். தங்கள் அன்னையார் தந்தையார் நாட்டார் அனைவரும் நலமா?

அ : நலந்தான் அக்கா.

ஜா : அரசர் பெருமான் எத்தனை நாள் தங்குவதாக எண்ணம்?

அ : இரண்டு நாள்கள்.

ஜா : அப்படியானால் மீண்டும் சந்திப்போம்.

—திரை விழுதல்—

---

## காட்சி : 31

---

[கானகத்தில் வேடர் குடிசை. முன்னால் மரத்திலிருந்து தூளி தொங்குகிறது. அதில் ஒரு குழந்தை அழுது கொண்டிருக்கிறது. அதை ஐந்து வயதுப் பெண்ணொருத்தி ஆட்டிக் கொண்டிருக்கிறாள். வேடன் மனைவி இடுப்பில் ஒரு குழந்தையுடன். அவள் சேலையைப் பிடித்துக் கொண்டு சிறியவனும் பெரியவனுமாக இரண்டு சிறுவர்கள் வருகிறார்கள். வேடன் வருகிறான். அவனுடன் இரண்டு பெரிய பையன்கள் வருகிறார்கள். எதையோ நெருப்பில் சுட்டுத் தின்கிறார்கள். காமிராவின் கோணம் ஒவ்வோர் குழந்தையின் மேலும் விழுகிறது. மொத்தம் ஏழு பேர்கள் அவர்களின் மக்கள்]

—திரை விழுகிறது—

## காட்சி : 32

[ஜாபாலாவும் அரசரும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். இப்போது அரசர் எளிய கோலத்தில் இருக்கிறார்.]

ஜா : பிரபு! நம் குரு தேவரை விட்டுப் போன பிறகு நீ என்ன செய்தாய்?

பி : அக்கா ! ஜாபாலா அக்கா ! உன்னை நான் அடிக்கடி நினைத்துக் கொள்வதுண்டு. உன் அறிவுக் கூர்மை என் நாட்டில் எவருக்குமே இல்லையக்கா.

ஜா : ஆரம்பித்து விட்டாயா?

பி : இல்லையக்கா. உண்மையாகவே தான் நான் சொல்கிறேன். என் அரண்மனையிலே ஒருத்தி கூட உன் கால் தூசுக்கு இணையாக மாட்டாள். குருகுல வாசத்திலே உன்னை நாங்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஆனால் இந்தப் பரந்த உலகத்திலே பழக்கம் ஏற்பட்டதும் தான் தெரிகிறது நீ எவ்வளவு உயர்ந்தவள் என்று.

ஜா : பிரபு ! உனக்கு எப்போது மகுடாபிஷேகம் ஆயிற்று? ஐந்தாண்டுகளுக்கு முன்னாலே என்று நினைக்கிறேன்.

பி : நம் குரு தேவரும் வந்துதானே எனக்கு மணிமுடி கவித்தார். ஆமாம்! உன் மகன் சத்தியகாமன் எங்கேயிருக்கிறான்?

ஜா : நீ இருக்கும் போது தானே அவன் கௌதமர் ஆசிரமம் போனான். அவரிடம் தான் இருக்கிறான். இன்னும் வரவில்லை. குருகுலவாசம் முடியும் நேரந் தான். விரைவில் வந்து விடுவான்.

பி : சென்ற மாதம் கௌதமரைப் பார்த்தேனக்கா ! மிகவும் உடல் தளர்ந்து விட்டிருக்கிறது.

—திரை விழுகிறது—

## காட்சி : 33

[கானகத்தில் ஒரு மரத்தடி. பசுக்கள் அசை போட்டுக் கொண்டிருக்கின்றன. நடுவில் ஒரு பாறை மேல் சத்திய காமன் வாலிபனாக உட்கார்ந்து கொண்டிருக்கின்றான். அவன் முன்னாலே ஒரு காளைமாடு வந்து நிற்கிறது. அவன் அதை நிமிர்ந்து பார்க்கிறான்.

காளை : சத்தியகாமா ! அன்பு மகனே !

சத் : (எழுந்திருந்து) ஐயா ! சொல்லுங்கள்.

கா : நாங்கள் ஆயிரம் பேர்களாகி விட்டோம் குருவின் வீட்டிற்கு வழி நடத்திச் செல்வாயாக.

சத் : அப்படியே ஐயனே !

கா : நான் திசைகளின் தேவன். வாயு என்பது என் பெயர். பரப்பிரம்மத்தின் ஒரு பாதத்தைப் பற்றி உனக்கு உபதேசம் செய்கிறேன். கேள்.

சத் : ஐயா ! உபதேசம் செய்யுங்கள்.

கா : கவனமாய்க் கேள். கிழக்குத் திசை ஒரு பாகம். மேற்குத் திசை ஒரு பாகம். தெற்குத்திசை ஒரு பாகம். வடக்குத் திசை ஒரு பாகம். நான்கு கலைகளையுடைய ப்ரகாசம் என்கின்ற பரப்பிரம்மத்தின் ஒரு பாதம் இது தான் மகனே ! புரிந்ததா?

சத் : புரிந்தது சாமி.

கா : இன்னுங்கேள். இப்படி நான்கு கலைகளையுடைய பரப்பிரம்மத்தின் இந்த ஒரு பாதத்தை எவன் அறிகின்றானோ, எவன் அதை ஒளியின் வடிவமாகக் கொண்டு ஆராதிக்கின்றானோ, அவன் இந்த உலகிலேயே ஒளிமயமாகின்றான். இப்படி நான்கு கலைகளையுடைய பரப்பிரம்மத்தின் இந்த ஒரு பாதத்தை எவன் இவ்வாறே அறிகின்றானோ, எவன் அதை ஒளியின் வடிவமாகக் கொண்டு ஆராதிக்கின்றானோ, அவன் அடுத்த மேல் உலகங்களிலேயே

உன்னதமான ஒளியுலகங்களையும் வெற்றி கொண்ட வனாகின்றான். புரிந்ததா?

சத் : புரிந்தது சாமி.

கா : பரப்பிரம்மத்தின் மற்றொரு பாதத்தைப் பற்றி அக்கினி தேவன் சொல்லுவான். எங்களை நீ இப்போது குருவின் வீட்டிற்கு வழி நடத்திச் செல்.

சத் : அப்படியே சாமி! (வணங்குகிறான்)

—திரை விழுகிறது—

## காட்சி : 34

[பசுக் கூட்டங்களைச் சத்தியகாமன் வழி நடத்திக் கொண்டு செல்கிறான். அவன் வாய் ''இறைவன் ஒளி வடிவம் - ஒளிமயமானவர் இறைவன்'' என்று முணு முணுத்துக் கொண்டே இருக்கிறது. ஓரிடத்தில் மந்தையை நிறுத்துகிறான். தனக்குள்]

சத் : இதோ அந்தி மாலை வந்து விட்டது. பொன்னைக் காய்ச்சி உருக்கி மேல் வானில் யாரோ கொட்டி விட்டார்கள். இந்த அந்திமாலைப் பொழுதுதான் என்ன அழகு! என் மந்தையை இன்று இரவு இங்கே நிறுத்துவேன். அதிகாலையிலிருந்து எங்கும் நில்லாமல் தொடர்ந்து நடந்து வரும் பசுக்கள் இப்போது ஓய்வு பெறட்டும். நானும் சிறிது நேரத்தில் சந்தியா வந்தனம் செய்வேன்.

[சொல்லிக் கொண்டு மந்தையைக் நிறுத்துகிறான். கல்லைத் தட்டி நெருப்பை மூட்டுகிறான். அதில் சுள்ளிகளைப் போடுகிறான். தீ கனன்று எரிகிறது. அந்தத் தீயை வணங்கி விட்டு எதிரில் பத்மா-சனத்தில் அமர்கிறான். தீயுடன் பேசுகிறான்]

பகவானே! நீ ஒளிமயமானவன் என்று வாயு பகவான் சொன்னார். சூரிய பகவான் தோன்றும் கிழக்குத் திசை நோக்கி நான் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். சூரியனும் ஒளித்தேவன். அவன் அம்சமான இந்த அக்கினியும் ஒளிமயம். உருவ மற்ற அந்தப் பரம் பொருளும் ஒளிமயம். உலகமே ஒளிமயம். எல்லாம் ஒளிமயம்''

[என்று சொல்லி அப்படியே கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்து விடுகின்றான். அப்போது ஒரு குரல் கேட்கிறது.]

குரல் : சத்திபகாமா!

சத் : (கண்ணைத் திறந்து) ஐயனே!

குரல் : நான் அக்கினி தேவன் பேசுகின்றேன்.

சத் : வணக்கம் ஐயனே!

அக் : பிள்ளாய்! பரப்பிரம்மத்தின் ஒரு பாதத்தை இப்போது நான் உபதேசிக்கிறேன். கேள்.

சத் : அப்படியே ஐயனே!

அக் : இந்த மண் நிலம் ஒரு பாகம். ஆகாயம் ஒரு பாகம். வானகம் (துறக்கம்) ஒரு பாகம். கடல் ஒரு பாகம். மகனே! நான்கு கலைகளையுடைய முடிவிலி என்னும் பரப்பிரம்மத்தின் ஒரு பாதம் இதுவே. உண்மையாகவே இதுவே! தீயும் நானே! இந்த மண்ணும் நானே! புரிந்ததா?

சத் : புரிந்தது ஐயனே!

அக் : எவன் ஒருவன், நான்கு கலைகளையுடைய பரப்பிரம்மத்தை இவ்வாறு அறிகின்றானோ, எவனொருவன் அந்தப் பரப்பிரம்மத்தை இப்படி முடிவில்லாத ஒன்று என்று ஆராதனை பண்ணுகிறானோ அவன், இந்த உலகத்திலேயே முடிவற்றவனாகின்றான். (அதாவது சிறந்த சந்ததிகளைப் பெறுகின்றான்) எவனொருவன் அந்த நான்கு கலைகளையுடைய பரப்பிரம்மத்தை இவ்வாறு உணர்கின்றானோ, எவன் ஒருவன் அந்தப் பரப்பிரம்மத்தை முடிவில்லாத ஒன்று என்று

ஆராதனை பண்ணுகின்றனோ அவன் முடிவில்லாத என்றும் அழியாத உலகங்களை யெல்லாம் வெற்றி கொள்வோனாகின்றான். புரிந்ததா ?

சத் : புரிந்தது சாமி !

அக் : பரப்பிரம்மத்தின் ஒரு பாதத்தை உனக்கு ஆதித்தியன் உணர்த்துவான். புரிந்ததா ?

சத் : புரிந்தது சாமி ! (வணங்குகின்றான்.)

- திரை விழுகிறது -

காட்சி : 35

[பசு மந்தை வந்து கொண்டிருக்கிறது. சத்தியகாமன் பாடிக்கொண்டே அதனுடன் வருகின்றான். அவன் பாடல் கேட்கிறது.]

பல்லவி

அறிந்து கொண்டேன் நான் அறிந்து கொண்டேன்
பரப் பிரம்மம் இது வென்றே நான்
(அறிந்து கொண்டேன்.)
வாங்கரும் பாதம் நான்குடைப் பிரம்மம் ஒன்று என
(அ)

[மாடுகளைத் தடுத்து மறித்து முளையடிக்கிறான். மாடுகளைக் கட்டுகிறான். மீண்டும் மீண்டும் இந்தப்பல்லவி சுழன்று கொண்டேயிருக்க நெருப்பை மூட்டுகிறான். சுள்ளிகளைப் போடுகிறான். தீ உயர்கிறது. அதன் முன் சம்மணமிட்டு அமர்கிறான். தொடர்ந்து பாடுகிறான். இசை உயர்ந்து எழுகிறது.]

சரணங்கள்.

கிழக்கும் மேற்கும் தெற்கும் வடக்கும்
நாலும் சேர்ந்தால் வருமொரு பாதம்
ஒளியாய் ஓங்கும் பிரம்மம் அதுவாம் !

(அ)

நிலனாய் விசும்பாய்த் துறக்கமாய்க் கடலாய்
வருமொரு நான்கும் சேர்ந்தொரு பாதம்
ஈறிலி என்னும் பிரம்மம் அதுவாம் !

(அ)

நெருப்பாய்க் கதிராய் நிலவாய் மின்னலாய்
வருவன நான்கும் மற்றொரு பாதம்
சுடராய் இலகும் பிரம்மம் அதுவாம் !

(அ)

உயிரே கண்ணே செவியே மனமே
எனவரும் நான்கும் மேலொரு பாதம்
சார்பாம் துணையாம் பிரம்மம் அதுவாம் !

(அ)

முற்றும்.

